# ஸ்ரீ ராமாநுஜன் 128

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக

மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 11 | 1959ஸ்ரீ ஆகஸ்டுமீ<br>விகாரிஸ்ரீ ஆவணிமீ | மலர் 8 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி-20

கிளரொளிசேர் கீழுரைத்த பேறு கிடைக்க
வளரொளிமால் சோலை மலைக்கே—தளர்வறவே
நெஞ்சைவைத்துச் சேருமெனும் நீடுபுகழ் மாறன்தாள்
முன் செலுத்துவோமெம் முடி.

| | | | |
|---|---|---|---|
| கிளர் ஒளி சேர் | அதிசயமான மேன்மை பொருந்தியதும் | தளர்வு அறவே | தளர்ச்சியில்லாமல் [திடமாக] |
| கீழ் உரைத்த | கீழ்த்திருவாய்மொழியில் சொல்லப்பட்டதுமான | நெஞ்சைவைத்து | மநஸ்ஸை வைத்து |
| பேறு | புருஷார்த்தம் | சேரும் எனும் | போய்ச்சேருங்கள் என்று உபதேசித்த |
| கிடைக்க | கிடைப்பதற்காக | நீடு புகழ் மாறன் | மஹா யசஸ்வியான ஆழ்வாருடைய |
| வளர் ஒளி | மேன்மேலும் வளர்ந்துவருகின்ற ஒளியை யுடையதான | தாள் முன் | திருவடிகளின் முன்பே |
| மால்சோலை மலைக்கே | திருமாலிருஞ்சோலைமலைக்கே | எம் முடி | எமது தலையை |
| | | செலுத்துவோம் | ஸமர்ப்பிப்போமாக. |

* * * எம்மாவீடென்கிற கீழ்த்திருவாய்மொழியில் நிஷ்கர்ஷிக்கப்பட்ட கைங்கரியமாகிற பரம புருஷார்த்தம் கிடைக்கவேணுமென்கிற நசையுடையீர்! அதற்காக வேறொரு தேச விசேஷம் தேடிப்போகவேண்டா; இந்நிலத்திலேயே பரமவிலக்ஷணமான திருமாலிருஞ் சோலைமலையிலே எல்லா அடிமைகளுங் கொள்வானாக அப் பெருமானெழுந்தருளி நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறானாகையாலே அத்திருமலையில்தானே சென்று சேர்ந்து அநுபவிக்கப் பாருங்கோள்—என்று உபதேசித்தருளின ஆழ்வாருடைய திருவடிகளுக்கே நமது தலையை அந்த உபதேசத்திற்குக் கைம்மாறாக அர்ப்பணம் செய்வோமென்றாராயிற்று.

கீழ்த்திருவாய்மொழியில் நிஷ்கர்ஷிக்கப்பட்ட பேற்றைப் பெறுதற்குத் திருமாலிருஞ் சோலைமலையை ஆச்ரயிக்கிறார் என்று எம்பெருமானார்க்கு முன்புள்ள முதலிகள் அருளிச்செய்யும்படி : எம்பெருமானார் அதை இன்னமும் இனிமைப்படுத்தி யருளிச்செய்வர். அதாவது—கீழ்த்திருவாய்மொழியில் 'ஒல்லை ஒல்லை' என்றும் 'காலக்கழிவு செய்யேல்' என்றும் பகவத் கைங்கர்யத்திலே தமக்குண்டான பதற்றத்தை ஆழ்வார் வெளியிட, அதுகண்ட எம்பெருமான் 'ஆழ்வார் இப்படிப் பதறுவது இந்த ஶரீரத்தோடேயே கைங்கரியம் செய்ய வேணுமென்கிற விருப்பத்தாலேபோலும்' என்றெண்ணி இவர்க்கு நாம் நினைத்தபடி பரிமாறுகைக்கு

ஏகாந்தமான ஸ்தலம் ஏதோவென்று இந்நிலவுலகில் கடாக்ஷித்துவருகையில் *வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ்சோலையைக் கண்டு இது சாலவும் பாங்கான இடமாயிரா நின்றது என்று திருவுள்ளம்பற்றி அங்கே ஸந்நிதி பண்ணியருளி, 'ஆழ்வீர்! நாம் உமக்குமுகந்தருகைக்காக வந்துநின்றோம்; நீர் இங்கேவந்து நினைத்தபடியெல்லாம் பரிமாறி யனுபவிக்கலாம்' என்று தெற்குத்திருமலையிலே தானிருக்கிறபடியைக் காட்டிக்கொடுக்க, ஆழ்வாரும் அதை அநுஸந்தித்து 'எம்பெருமான் நமக்கு உபேயனானால் அவன் எழுந்தருளியிருக்குமிடமும் நமக்கு உபேயந்தானே; ஆகவே, திருமலையோடு அதனோடு சேர்ந்ததொரு மலையோடு திருப்பதியோடு போம்வழியோடு, போவோமென்கிற அத்யவஸாயத்தோடு வாசியற எல்லாம் நமக்கு ப்ராப்யமே' என்று கொண்டு அநுபவித்து இனியராகிறார்—என்பதாக. ... (*)

---

## திருவரங்கம் பெரிய கோயிலில் மஹா ஸம்ப்ரோக்ஷணம்.

சென்ற விளம்பிஸு பங்குனி யுத்தரத் திருநாளில் பெரிய பெருமாளுடைய திருமேனியில் அவருடைய திருவுள்ளமொன்றே யறிந்த காரணவிசேஷத்தினால் நேர்ந்த தீ விபத்தின் நிமித்தமாகச் செய்யவேண்டிய திருப்பணிகள் மூன்று மாதங்களில் வெகு விரைவாகவே நடைபெற்று நிறைவேறினபடியால் 6–7–59 தேதி முதலாக 12–7–59 தேதி வரையில் மஹா ஸம்ப்ரோக்ஷணச் சடங்குகள் சாஸ்த்ர ஸம்ப்ரதாயங்களுக்கு அநுகுணமான முறையில் வெகு சிறப்பாக நடந்தேறின. அடியேன் அச்சமயத்தில் பூர்த்தியாக உடனிருந்து அநுபவிக்கும் பாக்கியம் பெற்றதனால் அடியேனுடைய அந்தரங்க ஸாக்ஷிகமான ஆனந்த பரீவாஹமாய் இதனை யெழுதுகின்றேன்.

ஹோமகுண்டங்கள் அமைத்திருந்தவிடமும் * அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச—அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவச* என்றருளிச்செய்திருந்த நம்பெருமாள் எழுந்தருளியிருந்த விடமும் வெகு விசாலமாய் அதி ரமணீயமாய்ப் பரமபவித்திரமா யிருந்தது. ஹோமகாரியங்கள் தினப்படி மூன்று காலங்களில் நடைபெற்றன. காலை 7 மணியிலிருந்து 11 மணி வரையிலும், பகல் 2 மணியிலிருந்து 5 மணி வரையிலும், மாலை 7 மணியிலிருந்து 9 மணி வரையிலும் ஆக தினப்படி ஒன்பதுமணி காலம் ஹோமங்கள் நடந்தன. தேவஸ்தான அர்ச்சகர்கள் மிகுந்த பக்தி ச்ரத்தையுடன் ஹோம காரியங்களை நிர்வஹித்தார்கள். இம் மூன்று காலங்களிலும் உபய வேதபாராயணங்களும் இதிஹாஸ புராண ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய திருமந்த்ரார்த்த ஸ்ரீ வசநபூஷணாதி ஸ்ரீ கோச பட்டனங்களும் அவிச்சிந்நமாக நடைபெற்றன. திவ்யப்ரபந்தம் ஸேவித்த அத்யாபக ஸ்வாமிகள் எண்பது திருநாமங்கள் பரம விலக்ஷணர்களாய் ஸேவை ஸாதித்தார்கள். இதிஹாஸ புராணாதி ஸ்ரீ கோசபட்ட நிரதர்களாய் விசேஷித்து வித்வான்களுமாய் இருபத்தைந்து ஸ்வாமிகள் ஸேவை ஸாதித்தார்கள். ருக்வேத யஜுர்வேத ஸாமவேத பாராயண ஸ்வாமிகள் நூறு திருநாமங்கள் ஸேவை ஸாதித்தார்கள். தினப்படி காலையிலும் இரவிலும் நம்பெருமாள் திருமுன்பே பெரிய திருவோலக்கமாக நின்று வேதசாந்தியும் திவ்யப்ரபந்த சாத்துமுறையும் நடந்த அதிசயம் நலமந்தமில்லதோர் நாட்டிலும் காணக்கிடைக்காதது. தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கே அஸாதாரணமான இந்த கைங்கர்ய ஸாம்ராஜ்யம் எவ்வகையான இடையூறுமின்றிக்கே பரமபாவனமாய் அதிவிலக்ஷணமாய் நடந்தேறும்படி செய்வித்தார்கள் அதிகாரிகள்.

மாத்வ ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஆர்யபடாள் வாசலுக்கு வெளியேயுள்ள மிக விசால மான கருட மண்டபத்தில் வீற்றிருந்துகொண்டு வேதபாராயணமும் இதிஹாஸ புராணபடன மும் ச்ராவ்யமாகச் செய்தார்கள். வடகலையார்களும் இவர்களோடு கூடி வேதபாராயணாதி கள் செய்யலாமாயிருந்தும் அவர்கள் கலந்துகொள்ளவில்லை. ஸ்ரீமத் பரமஹம்ஸ ஆண்டவன் பெரியாச்ரமத்திலிருந்துகொண்டு பாராயணங்கள் நடத்தினதாகக் கேள்வி.

10—7—59 தேதியில் காலை 9 மணியிலிருந்து மாலை 4 மணி வரையிலும் பரமபத வாசலுக்கருகாமையில் ஸஹஸ்ரகலசாபிஷேகம் வெகு சிறப்பாக நடைபெற்றது. 12–7–59 ஞாயிற்றுக்கிழமை காலை 8 மணிக்கு விமாந ஸம்ப்ரோக்ஷணத்திற்காகவும் பெரிய பெருமாள் ஸம்ப்ரோக்ஷணத்திற்காகவும் கும்பங்களுடன் நம்பெருமாள் புறப்பாடு கண்டருளத்தொடங் கினார். முதுநான்மறையும் அருளிச்செயலும் அலையாருங்கடல்போல் முழங்க இரண்டுமணி காலம் புறப்பாடு கண்டருளி பத்துமணிக்குமேல் மஹா ஸம்ப்ரோக்ஷணமும் உப்யவேத சாத்துமுறைகளும் தீர்த்தப்ரஸாத விநியோக கோஷ்டிகளும் கண்கொள்ளாக் காட்சியாக நடந்தன. மினிஸ்டர் கனம் பக்தவத்ஸலம் அவர்களும், எண்டோமெண்டு போர்டு கமிஷனர் உயர் திருவாளர் உத்தண்டராமன் அவர்களும், தேவஸ்தான ஆபீஸர் ஸ்ரீமான் மேனன் அவர்களும் மற்றும் பல அதிகாரிகளும் உடனிருந்து ஒழுங்குபாடுகள் செய்வித்து எவ்விதமான கலஹத்திற்கும் விபர்யயத்திற்கும் சிறிதும் இடமில்லாமே ஆச்சரியமான முறையில் இம் மஹோத்ஸவத்தை நடத்திவைத்தது மிகவும் போற்றத்தக்கதா யிருந்தது.

பங்குனி மாதத்தில் தீ விபத்து ஸம்பவித்த காலத்தில் "அந்தோ! பெரிய பெருமாளு டைய திருவுள்ளம் இப்படியாயிற்றே! நாஸ்திகர்கள் களித்துக் கூத்தாட இப்படியும் ஒரு ஸம்பவத்தை விளைவித்துக்கொள்ளலாமோ!" என்று உலகமெல்லாம் பரிதபிக்கும்படியாகவே யிருந்தது. 'எம்பெருமான் செயல் எதுவும் நன்மைக்காகவே விளைவது" என்கிற திடமான அத்யவஸாயமுடையவர்களுங்கூட நெஞ்சு குழம்பிக் குமுறும்படியா யிருந்தது. இப்போது தான் பெரிய பெருமாளுடைய திருவுள்ளத்தை விவேகிகள் கண்டறிய நேர்ந்தது.

உலகத்தில் ஆஸ்திகர்களின் தொகை அதிகமா? நாஸ்திகர்களின் தொகை அதிகமா? என்று விமர்சிப்பவர்கள் பெரும்பாலும் நாஸ்திகர்களின் தொகையே அதிகமென்று கருது மவர்களா யிருக்கின்றனர். இக்கருத்து பொருத்தமுடையதன்று என்றும், ஆஸ்திகர்கள் தாம் அபரிமிதர்களென்றும் காட்டியருளத் திருவுள்ளம்பற்றியே பெரிய பெருமாள் வெகு ஸாமர்த்தியமாக இந்த ஸம்பவத்தை விளைவித்துக்கொண்டதாக இப்போது அறிந்துகொண் டோம். நடந்த மஹா ஸம்ப்ரோக்ஷண நாட்களில் அங்குக் குழுமியிருந்த ஜனங்கள் நாற்றி சையிலிருந்தும் வந்து சேர்ந்தவை, பல லக்ஷக்கணக்கில் தேறின. *தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கம்* என்ற பெரியாழ்வார் பாசுரத்தில் கீழ்நாடும் மேல்நாடும் விடுபட் டிருந்தாலும் ஸகலநாடுகளுமே வந்து தொழுவதாகத்தான் ஆழ்வார் கருதியது. அது அதிச யோக்தியல்லவென்பதை ப்ரத்யக்ஷமாகக் காண ப்ராப்தமாயிற்று. பெரியபெருமாளுடைய திருமேனி ஸேவை 12—7—59 தேதியில் காலை 12 மணி முதலாக பக்தர்களுக்கு ப்ராப்தமாக வழியுண்டாயிற்று. அப்போது ஆலய நிர்வாஹ அதிகாரிகள் அமரிக்கையேற்படுவதற்காக க்யூ ஸிஸ்டமென்று லௌகிகர்கள் வழங்கும் முறைமையை ஏற்பாடுசெய்து, அந்த க்ரமத்தி னால் பெரிய பெருமாளை ஸேவிக்க ஸாதாரண ஜனங்களுக்கு ஸௌகரியம் செய்து கொடுத் தார்கள். மூன்று நான்கு நாட்கள் வரையில் இந்த க்ரமத்தில் பெரியபெருமாளை ஸேவித்த ஜனங்களின் தொகை எண்ண முடியாததாகவே யிருந்தது. இவ்வளவு ஆஸ்திகர்கள் உலகில்

உள்ளார்களா வென்று யாவரும் வியக்கும்படியாகவே யிருந்தது. *தென்னரங்கனை வாழ்த்தி மால்கொள் சிந்தையராய்........அயர்வெய்தும் மெய்யடியார்கள் தம் ஈட்டம் கண்டிடக் கூடு மேல் அதுகாணும் கண்பயனாவதே* என்று குலசேகராழ்வார் கூறியபடி மெய்யடியார்களை நாம் காண்பதோடு நில்லாமல் பெரியபெருமாளும் கண்டுகளிக்கத் திருவுள்ளம்பற்றியே இந்த [தீ 'விபத்தென்னும்] ஸம்பவத்தை விளைவித்துக்கொண்டதாக அறுதியிடலாயிற்று. இந்த ஸம்பவம் நேர்ந்திருந்ததில்லையாகில் இப்படிப்பட்ட திவ்யாத்புத மஹாகோஷ்டிகளை உலகம் ஸேவிக்க ப்ராப்தமாகுமோ?

திருவரங்கம் பெரிய கோயிலில் பகற்பத்து இராப்பத்து என்கிற திருவத்யயந மஹோத்ஸவமும் நான்கு ப்ரஹ்மோத்ஸவங்களும் மற்றும் பலபல வுத்ஸவங்களும் விசேஷ வைபவம் பொலிய நடைபெறுவதுண்டு. அத்தகைய ஸந்தர்ப்பங்களில் இத்தகைய மஹா கோஷ்டிகளை ஸேவிக்க ப்ரஸக்தியே கிடையாதன்றோ. மணவாளமாமுனிகளின் விபவ காலத்தில் ஒருஸம்வத்ஸரம் நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்க ளான ஸகலோத்ஸவங்களையும் நிறுத்திவைத்து மாமுனிகளைத் தம்மெதிரே வீற்றிருக்கச்செய்து ஈடுமுப்பத்தாறாயிரப்படியை ப்ரவசனம் செய்ய நியமித்தருளிக்கேட்டுகந்த பெரியபெருமாளை ஸ்ரீ மஹாவிஷ்ணுவென்று நாம் நினைத்திருப்பதன்றிக்கே ஸ்ரீவைஷ்ணவாக்ரேஸரர் என் றன்றோ நினைத்திருப்பது. அவர், தம்முடைய ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீயும் ஸ்ரீமத் யதீந்த்ர ப்ரவண ப்ராவண்யமும் எண்டிசையும் விளங்க இங்ஙனே ஒரு மஹோத்ஸவத்தைக் கண்டருளத் திரு வுள்ளம்பற்றியது ஆஸ்திகவுலகமனைத்தும் அகங்குளிர நின்றது.

உபய வேதபாராயணாதி கோஷ்டிகளில் அந்வயித்திருந்த ஸகல ஸ்வாமிகளுக்கும் ஸத் காரவிசேஷங்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடம், ஸ்ரீவான மாமலை மடம் முதலான விடங்களில் ததீயாராதனைகள் குறையற நடந்தன. உபந்யாஸங்க ளும் ஹரிகதா காலக்ஷேபங்களும் தேவஸ்தானத்தின் மூலமாகவே நடைபெற ஏற்பாடு செய் யப்பட்டிருந்தன. இவை ஸம்ப்ரோக்ஷண நாட்களில்மட்டு மன்றிக்கே இருபது நாட்கள் முன்னமே தொடங்கி நடைபெறுமாறு செய்யப்பட்டிருந்தது. ஆனால் இதில் ஒரு குறை; இவ் வுபந்யாஸங்களெல்லாம் ஸ்ரீரங்கநாதன் பெருமைகளைப் பற்றியே யிருக்கவேண்டுமென்று அதிகாரிகள் நிபந்தனை செய்திருந்தால் நன்றாயிருக்கும். ஸ்வரூபஜ்ஞர்களான சில மஹான் களின் உபந்யாஸங்கள் மட்டுமே இவ்வகையில் அமைந்தன.

பொதுவாக இந்த மஹாஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவ வைபவம் அப்ரமேயமாகவே யிருந்தது. ஆழ்வார் திருநகரி, வானமாமலை, திருக்குறுங்குடி, திருமலை, பெருமாள் கோயில், திருநாராயணபுரம், திருவாலி திருநகரி, திருநாங்கூர், தில்லைத் திருச்சித்திரகூடம் முதலான ஸகல திவ்யதேசங்களிலிருந்தும் பரம விலக்ஷணர்களான வைதிகோத்தம ஸ்வாமிகள் எழுந் தருளி ஸேவை ஸாதித்த சீர்மையானது *கலியுகமொன்று மின்றிக்கே தன்னடியார்க்கு அருள்செய்யும் மலியுஞ்சுடரொளிமூர்த்தி மாயப்பிரானுடைய திருவுள்ள முகக்க நின்றது.

ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய.

அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ.

நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

# வாக்யஜ்ஞ நிகழ்ச்சி வைபவங்கள்

ஸ்ரீரங்க ஸம்பவத்தையொட்டியே விச்வக்ஷேமார்த்தமான வாக்யஜ்ஞம் 15—7—59 தேதி முதல் 26—7—59 தேதிவரை சென்னைமாநகரில் நடத்த ஸங்கல்பிக்கப்பட்டிருந்தது உலகமறிந்ததே. தமிழ் தெலுங்கு ஸம்ஸ்க்ருதம் ஹிந்தீ ஆகிய நான்கு பாஷைகளிலும் பிரகடந பத்ரிகைகள் வெளியிட்டிருந்தபடியால் நாம் எதிர்பார்த்தபடிக்கு மேலாகவும் விலக்ஷண ஸ்வாமிகளும் பக்தர்களும் பாகவதர்களும் ஆண்டாள் கோஷ்டியாரென்னப்படுகிற ஸதீமணிகளும் குழுமியிருந்தார்கள். இந்த யஜ்ஞம் பன்னிரண்டுநாள் விசேஷ வைபவமாக நடைபெறவேணுமென்றும், இதில் நாலாயிரதிவ்யப்ரபந்தஸேவை, ரிக்யஜுஸ் ஸாமவேத பாராயணங்கள், இதிஹாஸபுராண ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதி படனங்கள் மிகச்சிறப்பாக நடக்கவேணுமென்றும் நாம் பாரித்திருந்தபடியே வெகு அற்புதமாக நடந்தேறியது.

15—7—58 புதன்கிழமை காலை 12 மணிக்குள்ளாகவே ஸ்வாமிகள் பெரும்பாலும் வந்து சேர்ந்தனர். அன்று மாலை 4 மணிக்கு சென்னை ஸ்ரீரங்கநாதஸ்வாமி ஸன்னிதியில் எல்லாருமாகக்கூடித் தொடக்கம்செய்து, கோஷ்டிக்கு தீர்த்தப்ரஸாதவிநியோகாதிகளும் நடந்து, அங்கிருந்து பெருமாளுடைய பரிகரங்களோடுகூடத் திருவீதிவலமாக பாராயணஸ்தலமாகிய உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமாநுஜகூடம் வந்துசேர மாலை 6 மணியாயிற்று. அன்று லௌகிகத்தலைவர்களில் பரிகணிதரான ப்ரஹ்மஸ்ரீ டாக்டர் யூ. கிருஷ்ண ராவ் அவர்கள் இந்த மஹாகோஷ்டியை ஸேவிக்க வந்திருந்து தம்முடைய ஆனந்த பரிவாஹமாகச் சிறியதோர் சொற்பொழிவும் செய்தார். அன்றிரவு 8 மணிக்கு கோஷ்டி முடிவுபெற்றது. மறுநாள்முதற்கொண்டு ஒவ்வொரு நாளும் காலை 6 மணிமுதல் இரவு 9 மணிவரை அவிச்சிந்நமாகவே இம்மஹோத்ஸவ கோலாஹலங்கள் நடைபெற்றுவந்தன. (1) ப்ரபாதஸேவை. (2) திவ்யப்ரபந்த ஸேவாகாலம். (3) வேதபாராயணம். (4) உபந்யாஸங்கள். (5) சாத்துமுறை. இப்படி ஐந்து ப்ரகாரமாக இந்த வாக்யஜ்ஞாநுபவம் நிகழ்ந்தது. ஒவ்வொன்றும் பரமவிலக்ஷணமாகவே அமைந்தது.

## 1. ப்ரபாதஸேவாக்ரமம்

நடோறும் காலை 6 மணிக்குள்ளாகவே ஸகல ஸ்வாமிகளும் நித்யாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ‘ச்வேதத்வீபவாஸிகளோ இவர்கள்!’ என்னலாம்படி பரமவிலக்ஷணர்களாக ஸேவைஸாதிப்பர்கள். 6 மணியடிக்கும்போதே குடைசாமரங்கள் முதலான திவ்யஸ்தோமங்களுடனே திருவீதி புறப்பாடு ஆரம்பமாகும். முன்னே வேதகோஷ்டியும் பின்னே ஸஹஸ்ரநாமகோஷ்டியும் இடையில் ஸ்தோத்திரகோஷ்டியுமாக “கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம், தொண்டீரெல்லீரும் வாரீர் தொழுது தொழுது நின்றார்த்தும்” என்னும்படியாக நூற்றுக்கணக்கான ஸ்வாமிகள் எண்ணிறந்த பக்தபாகவதோத்தமர்களுடனேகூட வீதியாரவந்தவழகு வெகு விலக்ஷணம். சென்னை டவுனில் புராதன ஸன்னிதிகள் ஐந்து உள்ளன. 1. ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதி. 2. ஸ்ரீகேசவப்பெருமாள் ஸன்னிதி. 3. திருவேங்கடமுடையான் ஸன்னிதி. 4. மேலண்டையுடையவர் ஸன்னிதி. 5. கீழண்டையுடையவர் ஸன்னிதி. ஆக இவ்வைந்து ஸன்னிதிகளிலும் இரண்டிரண்டுநாள் மங்களா

சாஸனம் செய்யலாயிற்று. சென்னை கேசவப்பெருமாள் ஸன்னிதியிலும் திருவேங்கடமுடையான் ஸன்னிதியிலும் பலவாண்டுகளாகவே தினப்படி (காலை 6-30க்கு) ஸுப்ரபாதஸ்துதிகள் ஸேவிக்கும்வழக்கம் நிகழ்ந்து வருகின்றது. அந்த ஸமயவிசேஷத்திற்குச்சேர ஸ்வாமிகள்கோஷ்டி அங்கு எய்துவதும் உடனே விச்வரூபமாகி ஸுப்ரபாதம் ஸேவிப்பதும் பரமபோக்யமா யிருந்தது. 24—7—59 வெள்ளிக்கிழமை காலை இத்தனை ஸ்வாமிகளும் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸன்னிதியில் சென்று மங்களாசாஸனம் செய்யத் திருவல்லிக்கேணிப் பிரமுகர்களான ஸ்ரீஉவே. ஆசால் சேஷாசாரியர் ஸ்வாமி B.A., B.L., M. O. அழகசிங்கராசாரியர்ஸ்வாமி (பக்தன் ஆசிரியர்), V. P. நரஸிம்ஹாசாரியர் முதலானோர் வெகு உத்ஸாஹத்துடன் ஸம்விதானங்கள் செய்திருந்தார்கள். முக்கியமான பஸ் வஸதி செய்துகொடுக்கப்பட்டது. தேவஸ்தானம் டிரஸ்டிகளான ஸ்ரீஉவே. ராகவையங்கார் முதலான மூவரும் ஸன்னிதி நித்தியப்படி க்ரமங்களை தநுர்மாஸத்திற்போல் நடத்திவைத்து ஸ்வாமிகளின் வருகையை எதிர்பார்த்திருந்தார்கள். காலை 6 மணிக்கு நித்யக்ரமமான திருப்பாவை சாத்துமுறையும் தீர்த்தப்ரஸாதவிநியோக கோஷ்டியும் ஸ்வாமிகளின் மங்களாசாஸனமும் உடனே திருவீதிப்ரதக்ஷிணமும் நடைபெற்றது. இந்த வாக்யஜ்ஞத்தின் ப்ரபாதஸேவையில் இதுவே சிகரமாய் அமைந்தது. 26—7—59 ஞாயிற்றுக்கிழமையன்று வாக்யஜ்ஞஸமாப்தியாதலால் அன்றுகாலை ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதியிற்சென்று திருப்பாவை சாத்துமுறையும் விசேஷமான ப்ரஸாதபணியாரவிநியோக கோஷ்டியும் நடந்தேறியது. இது ப்ரபாதஸேவாப்ரபாவம்.

## 2. திவ்யப்ரபந்த ஸேவாகாலம்

காலை 7 மணிமுதல் 10 மணிவரைக்கும், மறுபடியும் 3 மணிமுதல் 6 மணிவரைக்கும் திவ்யப்ரபந்தஸேவை நடைபெற்றவழகு "என்சொல்லவல்லேனென் வாய்கொண்டே" என்னும்படியாகவேயிருந்தது. காலைவேளைகளில் முதலாயிரமும் பெரியதிருமொழியாயிரமும் க்ரமேண ஸேவிக்கப்பட்டது. பிற்பகலில் இயற்பாவும் திருவாய்மொழியும் ஸேவிக்கப்பட்டுவந்தது. ஸேவிக்க வந்திருந்த ஸ்வாமிகள் பெரும்பாலும் மஹாநிபுணர்களாகையாலே "மரங்களுமிரங்கும் வகை" "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே" "மூவுலகு முருகுமே" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்திருந்தபடி ஸேவாக்ரமம் அமைந்தது. 'கபடம்விட்டு ஸேவிப்பது' என்பது விசேஷித்துக் காணலாயிருந்தது. பதினோராவதுநாள் (25—7—59) காலையில் பெரியதிருமொழி சாத்துமுறையும் அன்றிரவு திருவாய்மொழி இராமாநுச நூற்றந்தாதிஸேவை ஸமாப்தியுமாயிற்று.

## 3. வேதபாராயணமும் வேதாங்கபாராயணமும்

காலையில் திவ்யப்ரபந்தஸேவை முடிந்து மறுபடியும் பிற்பகலில் அது புநராரம்பமாவதற்கு இடையில் ஐந்துமணி காலமுண்டு. அப்போது வேதபாராயணகோஷ்டிகளும் இதிஹாஸபுராணபடனங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதி ஸேவையும் நடந்துவந்தன. ரிக்வேதத்திற்கு இருவரே அதிகாரிகள் கிடைத்தனர். ஸாமவேதிகள் அறுவர் எழுந்தருளினர். யஜுர்வேதிகள் இருபது திருநாமங்கள் ஸேவைஸாதித்தனர். இந்த வாக்யஜ்ஞம் நடந்தவிடம் அதிவிசாலமாகையாலே ஒருபுறம் மூன்று வேதங்களின் முழக்கமும் மற்றொருபுறம் இதிஹாஸபுராணாதிபடன ப்ரணாளியும் கர்ணச்ராவ்யமா யிருந்தது.

## 4. உபந்யாஸகோஷ்டி

மாலை 6 மணிமுதல் 7 மணிவரை உபந்யாஸ காலமாக வைக்கப்பட்டிருந்தது. ஆனால் ஒவ்வொருநாளும் 5-30 மணிமுதல் 8-15 மணிவரையிலும் உபந்யாஸங்கள் நடந்துவந்தன. சென்னையில் ஆங்காங்கு உபந்யாஸகர்களாக விளங்கும் மஹான்கள் பெரும்பாலும் எழுந்தருளி உபந்யஸித்து ஸதஸ்யர்களை ரஞ்ஜிப்பித்தார்கள். அனைவர்க்கும் உபந்யாஸ விஷயங்கள் ஸ்ரீரங்கநாதன் பெருமையே. இவ்வுபந்யாஸகோஷ்டிக்கு அனேக நாட்களில் லௌகிகப்பெரியார்கள் பலர் விஜயஞ்செய்து தங்களுடைய ஸந்தோஷாதிசயத்தைத் தெரிவித்துக்கொண்டார்கள். ப்ரஹ்மஸ்ரீ டாக்டர் V. ராகவன் முதலானோர் இந்த ச்ரேணியில் சேர்ந்தவர்கள்.

## 5, நித்தியப்படி சாத்துமுறை கோஷ்டி

உபந்யாஸ கோஷ்டி முடிந்ததும் தினப்படியாகச் சாத்துமுறை கோஷ்டி அரைமணிகாலம் நடைபெற்று வந்தது. அன்றன்று ஓதின வேதத்தில் ஓர் அநுவாகம் நிறுத்திவைத்து அதை ஸமாப்தி செய்து சாந்தி சொல்லி முடிப்பது. திருவாய்மொழியின் ஒவ்வொரு பத்திலும் இறுதிப்பதிகத்தை நிறுத்தி வைத்திருந்து அதனைப் பூர்த்திசெய்து வாழிதிருநாமம் ஸேவித்து முடிப்பது; ஸ்தோத்ரங்களையும் ஸேவிப்பது. இந்த கோஷ்டி, பழவகைகள் விநியோகம் செய்து தக்ஷிணை ஸமர்ப்பிப்பதோடு பூர்த்தியாகும்.

## 26—7—59 ஸமாப்தி தினத்தின் செய்திகள்

இந்த வாக்யஜ்ஞம் (15—7—59ல்) சென்னை ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதியில் உபக்ரமிக்கப்பட்டபடியால் ஸமாப்தியின் ஒரு சிறு பகுதியை அந்த ஸன்னிதியிலேயே செய்யவெண்ணி நித்யக்ரமமான ப்ரபாதஸேவை அந்த ஸன்னிதியை நோக்கி நடைபெற்றது. அங்கே ஸன்னிதியின் நித்யக்ரமத்தில் திருப்பாவை ஸேவை சாத்துமுறை தீர்த்த ப்ரஸாத விநியோக கோஷடிகள் நடைபெற்றுப் பெருமாளுடைய பஹுமானமும் பெற்று யதாஸ்தானம் வந்து சேர்ந்து, திருப்பல்லாண்டு திருப்பள்ளியெழுச்சி திருப்பாவை உபதேசரத்தினமாலை திருவாய்மொழி நூற்றந்தாதி இவை ஸேவித்துத் தலைக்கட்டி 10-30க்குமேல் திவ்ய ப்ரபந்த சாத்துமுறையாகப் பன்னிரண்டு மணியாயிற்று. ஸ்ரீரங்கத்திலிருந்து எழுந்தருளியிருந்த ஸ்ரீஉவே. பண்டிதராஜ மெ. ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமி இந்த வாக்யஜ்ஞ கோஷ்டிக்கு மங்களாசாஸன ரூபமாக ஐந்து ச்லோகங்கள் ஸாதித்து அவற்றின் பொருளைச் சுருக்கமாக உபந்யஸித்தார். உடனே கோஷ்டிக்குச் சாத்துப்படி அடைக்காய் முதலானவை விநியோகமாகி ஸம்பாவனையுமாயிற்று. ஸகல ஸ்வாமிகளுக்கும் சால்வையும் 40 ரூபாய்க்குக் குறையாத ஸன்மானமும், போகவர ரைல் பஸ் செலவுகளும் வழங்கப்பட்டன.

## பொதுவான சில விசேஷங்கள்

பன்னிரண்டு நாட்களிலும் மூன்று வேளைகளிலும் நடந்த ததீயாராதனையின் சிறப்பு வாசாமகோசரம். பரத்வாஜாச்ரமத்து ஆதித்த்யம் இதற்கு இணையாயிருக்க முடியாதென்றே யாவரும் ஒருமிடறாகச் சொல்லிக் கொண்டார்கள். சென்னையில் இது அபூர்வ ஸம்பவமாகையாலே தனிகர்களான சில ஆஸ்திகபக்தர்கள் இடையிடையே வஸ்த்ரதானமும் யதாசக்தி த்ரவ்யதானமும் செய்து ஸத்தை பெற்றார்கள்.

## முடிவாக அடியேன் செய்யும் விண்ணப்பம்

எம்பெருமானை ஸத்யகாமனென்றும் ஸத்யஸங்கல்பனென்றும் கொண்டாடி வருகிறோம். *தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்வர்* என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்தபடி தன்னுடைய குணவிசேஷங்களைத் தன்னடியார்களுக்கும் பூட்டி உகக்குமவனை ஸர்வேச்வரன் இந்த வாக்யஜ்ஞ விஷயத்தில் அடியேனை ஸத்யஸங்கல்பனாக்கி வைத்த அதிசயம் எத்திறம்! என்னத் தக்கதத்தனை. பெரியபெருமாள் திருமேனிக்கு அவத்யம் நேர்ந்த செய்தி செவிப்பட்ட க்ஷணத்திலேயே இங்ஙனே வாக்யஜ்ஞமொன்று நடத்தி மனச்சாந்தி பெறவேணுமென்கிற ஸங்கல்பம் அடியேனுக்கு உண்டாயிற்று. அல்பனான அடியேனுடைய அத்யல்பசக்திக்குச் சேர இவ்வனுஷ்டானத்தைச் சிறுகக் கோலவேண்டியிருந்தும் இந்த ஸங்கல்பத்தை யுண்டாக்கினவன் ஸத்யஸங்கல்பனான *அணியார்பொழில் சூழரங்க நகரப்பனேயாதலால் சிறுகக்கோலாதே பெருகக்கோல நேர்ந்து விட்டது. அடியேனுடைய வாழ்நாளில் நெடுநாளாகக்கண்ட அநுபவம் ஒன்றுண்டு; அதாவது; அடியேன் எது நினைத்தாலும் அது முட்டுப்படாதே தட்டுப்படாதே தலைக்கட்டியே தீருமாயிற்று. இந்த வாக்யஜ்ஞ நிகழ்ச்சியிலிருந்து அடியேனுக்கு ஒரு செருக்கு உண்டாயிற்று—ஸுகரம் துஷ்கரம் என்று வாசிபாராமல் எதையும் இனி நாம் ஸங்கல்பித்து விடலாம் என்று.

அடியேனுக்குப் பரமாப்தரான ஸ்ரீஉவே. மங்கலம் ராமாநுஜாசாரியர் ஸ்வாமியோடு இது ஸம்பந்தமாக அடியேன் ஆனந்தம் பொங்கி வார்த்தையாடிக்கொண்டிருக்கையில் "பரமபதத்திற்குப் படிகட்ட வேணுமென்றுகூட அடியேன் மனோரதிக்கலாம் போலிருக்கிறது" என்றேன். அதற்கு அந்த ஸ்வாமி ஸாதித்த பதில் மிக்வும் ரஸிக்கத்தக்கதாயிருந்தது. அதாவது "இவ்விடத்திற்காட்டிலும் பரமபதம் தனிப்பட்டதாயிருந்தாலன்றோ படிகட்டப் பாரிக்கவேணும்; இவ்விடமே பரமபதமாக ஆய்விட்டதே; பரமபதத்திற்கும் மேலாக ஆய்விட்டதே, எதற்காகப் படிகட்டுவது?" என்றார். அஸூயையின்றி இந்த திவ்யகோஷ்டிகளை ஸேவிக்கப்பெற்றவர்கள் யாவரும் இப்படியே நினைக்கும்படியாகத்தானிருந்தது. நாலாயிரம் ரூபாய்ச் செலவில் நடத்த உத்தேசித்திருந்தவிது ஏறக்குறைய பதினாயிரம் ரூபாய்ச் செலவில் நடைபெற்றது பகவத் ஸங்கல்பவிசேஷமத்தனை.

அடியேனுடைய உத்தேசங்களையெல்லாம் குறையற நடத்தியருள்பவன் எம்பெருமானேயாயினும் அவன் தானும் சிலரை அநுப்ரவேசித்தே நடத்துபவனாதலால் ப்ரக்ருத வாக்யஜ்ஞத்தை ஐவர் மூலமாகப் பரிமளிக்க நடத்தி வைத்தான். (1) ஸ்ரீஉவே. A. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி. (2) ஸ்ரீமான் கொஞ்சேடி ஸுப்ராயலு செட்டியார். (3) ஸ்ரீமான் மந்தாரம் மணவாள செட்டியார். (4) ஸ்ரீமான் கொண்டலேடி கன்னைய நாயுடு. (5) ஸ்ரீமான் V. R. எதிராஜம் செட்டி. இவர்கள் விஷயத்திலும், இவர்களுக்கும் பலவழிகளிலும் துணைபுரிந்த மற்றும் பல கனதனவான்கள் விஷயத்திலும் நாம் மிகவும் க்ருதஜ்ஞர்களாயிருக்கின்றோம்.

தழைநல்லவின்பம் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே.

இங்ஙனம்:

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்.**



MADRAS VAK-YAJNA COMMITTEE MEMBERS

வாக்யஜ்ஞ கோஷ்டியின் ஸமய விசேஷக் காட்சிகள்.





வாக்யஜ்ஞ கோஷ்டியின் ஸமய விசேஷக் காட்சிகள்.





# இந்த வாக்யஜ்ஞத்தில் முக்கியமாக அந்வயித்த ஸ்வாமிகளின் திருநாமங்கள்

## ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகாரிகள்

ஸ்ரீஉவே. கோமடம் திருநாராயணையங்கார் ஸ்வாமி மேல்கோட்டை. ஸ்ரீபாஷ்யம்.
,, இளையவில்லி சடகோபாசார்யஸ்வாமி ஆழ்வார் திருநகரி. பகவத் விஷயம்.

ஸ்ரீஉவே. மெ. ஸுந்தரராஜாசாரியர்ஸ்வாமி. கோயில். பகவத்.விஷயம்
,, எம்பார் வேங்கடாசாரியர் ஸ்வாமி திருநகரி ஷை.
,, தி. அ. சதாபிஷேகஸ்வாமி கோயில். ஸ்ரீவசநபூஷணம்.

## இதிஹாஸபுராணாதிகாரிகள்

ஸ்ரீஉவே. திருமழிசை பக்திஸாராசாரியர்.
,, M. V. ஸ்ரீநிவாசராகவாசார்.
,, K. ஸ்ரீநிவாஸவரதாசாரியர், நுங்கம்பாக்கம்.
,, இளங்காடு, நிகமாந்தாசார்.
,, ச்ருங்காரம் நரஸிம்ஹாசாரியர், சனிவாரபேட்டை.
,, குளத்தூர், ரங்காசாரியர்.

ஸ்ரீஉவே. கோமடிபல்லி, ஸ்ரீரங்காசார்.
,, கொண்டங்கி, ஸ்ரீநிவாஸதாதாசார், வில்லிவாக்கம்.
,, கொத்திமங்கலம் ஸ்ரீநிவாஸாசாரியர்.
,, S. ராமாநுஜாசாரியர், மாம்பலம்.
,, ஆராசூர் ராஜகோபாலாசார்.
,, கோமல் ஸ்ரீநிவாஸாசாரியர்.
,, மடவளாகம் துரைஸாமி ஐயங்கார்.

## திவ்யப்ரபந்தாதிகாரிகள்

ஸ்ரீஉவே. தி. வி. சிங்க்ராசாரியர், ஸ்ரீகாஞ்சீ.
,, தி. அ. கிருஷ்ணமாசாரியர் ,,
,, மடவளாகம் தி. அ. கோபாலாசாரியர் ,,
,, தி. த. பாஷ்யகாராசாரியர் ,,
,, ப்ர. ரங்கநாதன்(செல்வமணி) ,,
,, கோ. க. அண்ணன் ரங்கராஜாசாரியர் ,,
,, A. V. வெங்கடாசாரியர், காரப்பங்காடு.
,, மணவாள திருவேங்கடாசாரியர், ஸ்ரீபெரும்பூதூர்.
,, திருநாங்கூர், எம்பார் ஸ்ரீநிவாஸாசாரியர்.
,, கந்தாடை சேஷாத்ரி ஐயங்கார், திருப்பாப்புலியூர்.
,, மடம் கோபாலையங்கார், திருவல்லிக்கேணி
,, அண்ணாவியார் ராமையங்கார், ஆழ்வார் திருநகரி.
,, தென்திருப்பேரை ஸ்ரீராமையங்கார்

ஸ்ரீஉவே. தாமல் ரங்கஸாமி ஐயங்கார்.
,, குணக்கரம்பாக்கம், அ. புருஷோத்தமாசாரியர்.
,, ஸ்ரீவில்லிபுத்தூர், அரையர் ஸ்ரீநிவாஸாசாரியர்.
,, ஸ்ரீவில்லிபுத்தூர், வேதப்பிரான் பட்டர் கோவிந்தராஜாசாரியர்.
,, நெல்லூர், சக்ரவர்த்தி வெங்கடாசாரியர்.
,, ஆழ்வார்திருநகரி, சடகோபய்யங்கார்.
,, மாமண்டூர், திருநாரணையங்கார்.
,, காழியூர் ம. ஸ்ரீநிவாஸாசாரியர்
,, வானமாமலை ஐயங்கார்.
,, மாமண்டூர், வாத்தியார் குப்புஸாமி ஐயங்கார்.
,, தேரழுந்தூர், சௌரிராஜர்.
,, அகரம் கண்ணமாசார்.

## வேதாதிகாரிகள்

ஸ்ரீஉவே. ஈ. சடகோபாசாரியர், ஸ்ரீகாஞ்சீ.
,, மணவாள திருமலாசாரியர் ,,
,, கோ. க. அ. ராகவாசார் ,,
,, மா. கு. நரஸிம்ஹாசாரியர் ,,
,, தி. அ. பு. ஸ்ரீநிவாஸாசாரி.
,, கோ. க. அ. ராமாநுஜாசார்.

ஸ்ரீஉவே. புரிசை, பட்டப்பா.
,, தெரணி, வரதவிஷ்ணுவாசார்.
,, திருவாலிகளபாடி, பார்த்தஸாரதி ஐயங்கார்.
,, திருக்கண்ணபுரம், ராஜகோபாலாசாரியர்
,, உழப்பாக்கம், துரைசாமிஐயங்கார்.

## ஸாமவேதிகள்

உ_வே. கோயில் திருமலை ஐயங்கார்.
,, ,, கோவிந்தாசாரியர்.
,, ,, ஸ்ரீநிவாஸாசாரியர்.
உ_வே. கோயில் ஸ்ரீராமஐயங்கார்.
,, கோயில் P. S. ராமஸ்வாமி ஐயங்கார்.
,, அண்ணுஸாமி ஐயங்கார், G.T.

## ருக்வேதிகள்

,, காளமேகய்யங்கார், திருமோகூர்.
,, R. P. ராஜகோபாலையங்கார்,கோயில்.

## வாக்யஜ்ஞ ஸமிதி நிர்வாஹகர்கள்

போஷகர்கள்

ஸ்ரீ V. ராஜகோபாலாசாரி, M.L.
,, V. ஆனந்தகிருஷ்ண செட்டி.
,, C. சேஷாசலம்செட்டி, M. A.
,, ஊடுகூரு, ரங்கநாயக செட்டி.
உ_வேமங்கலம் ராமாநுஜாசாரியர்.
ஸ்ரீ சித்தூர், வீரராகவு லுசெட்டி.
,, K. வெங்கடசாமி நாயுடு, B.A B.L.
,, கோட. ஸ்ரீநிவாஸய்ய.
,, உம்மிடி. பாண்டுரங்கம் செட்டி.
,, உம்மிடி. ஸ்ரீராமுலு செட்டி.
,, தேஸு. வெங்கடஸுப்பய்ய செட்டி.
,, க்ரந்தே. நரஸய்ய செட்டி.
,, புலிபாடி,ஸோமஸுந்தரராவ்
,, கொப்பரம். நடேச செட்டி.
,, ஸூரா. சேஷாசலம் செட்டி.
ஸ்ரீ சேஞர், பத்மநாபம் செட்டி.
,, G. வேதாசலம் செட்டி.
உ_வே. ஸுந்தரராஜய்யங்கார், காளஹஸ்தி.

பிரஸிடெண்டு :
V. எம்பெருமானர் செட்டி,
ஷெரீப் of மதராஸ்.
வைஸ்பிரஸிடெண்ட்ஸ் :
நாடெள்ளஸம்பத்துசெட்டி.
K. திருவேங்கடாசாரியர், B.A.B.L.
ஸெக்ரிடெரீஸ் :
C. ஸுப்ராயலு செட்டி.
A. V. கன்னைய நாயுடு.
அஸிஸ்டெண்ட் செக்ரிடெரி :
V. R. எதிராஜுலு செட்டி.
டிரஷரர் :
A. ஸ்ரீநிவாஸய்யங்கார்.

## கமிட்டி மெம்பர்ஸ்

ஸ்ரீ. கராலபாடி ராதாகிருஷ் ணய்யா.
,, P.கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
,, N. கிருஷ்ணமூர்த்தி.
,, மந்தாரம். மணவாள செட்டி.
,, M. தேவராஜுலு நாயுடு.
,, C. சின்னி கிருஷ்ண செட்டி.
,, எச்சா. ஸர்வோபகாரி
,, நீலம். ராதாகிருஷ்ணநாயுடு.
,, V. C. சக்ரபாணி செட்டி.
ஸ்ரீ R. இளையாழ்வாரய்யா.
,, கராலபாடி ரங்கநாதய்யா.
,, கந்தவடி. ஸ்ரீராமுலு செட்டி.
,, புவ்வாட. ஸீதாராம செட்டி.
,, C. ராஜாபாதர் செட்டி.
,, G. ஸ்ரீநிவாஸலு செட்டி.
,, V. K. தனபால் செட்டி.
,, ஜி. ஸ்ரீநிவாஸன்,
,, N. வரதராஜுலு.
,, துர்கய்ய செட்டி.

# அபத்த பாடங்களின் அநுவ்ருத்தி

நிகழ்ந்த வாக்யஜ்ஞத்தை யொட்டியே இந்த வியாஸம் எழுதலாகிறது. தொண்டை நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு ஆகிய மூன்று நாடுகளிலிருந்தும் அத்யாபகஸ்வாமிகள் வாக்யஜ்ஞத்திற்கு எழுந்தருளியிருந்து திவ்ய ப்ரபந்தங்கள் ஸேவித்தபோது அடியேன் உடனிருந்து ஊன்றிக் கவனித்த காலத்து பாடங்களில் பிறழ்வுகள் நேர்ந்திருப்பது எல்லா நாடுகளிலும் ஏகரூபமாகவே யிருப்பதை நோக்கி வியப்படைந்தேன். பாசுரங்களில் சில வாக்கியங்கள் ஸ்வல்ப பேதத்துடன் இரண்டிடங்களில் வரும். அந்த பேதத்தை உற்று நோக்காமல் இரண்டிடங்களிலும் ஒரே விதமாகவே ஸேவிப்பது அத்யாபகர்களின் இயல்பாகக் காண்கிறது. இதன்கீழ் நாம் கொடுக்கும் உதாஹரண வாக்கியங்கள் காண்க.

1. திருப்பாவையில் *ஒருத்தி மகனாய் பாசுரத்தில் "கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்" என்றுள்ளது. நாச்சியார் திருமொழியில் (14-7) *பொருத்தமுடைய நம்பியையென்னும் பாசுரத்தில் "கருத்தைப் பிழைத்து நின்ற அக்கருமா முகிலைக் கண்டீரே" என்றுள்ளது. இங்கு 'கருத்தைப் பிழைப்பித்து நின்ற' என்பது கிடையாது. ஆகிலும் இரண்டிடத்திலும் 'கருத்தைப் பிழைப்பித்து' என்றே ஸேவித்து வருகிறார்கள்.

2. திருவாய்மொழியில் (4-10-10) *உறுவதாவதெத்தேவு மென்கிற பாட்டினீற்றடியில் "குறிய மாணுருவாகிய நீள்குடக்........" என்றுள்ளது. பெரியதிருமொழி அஞ்சாம்பத்து முதற்பாட்டினிரண்டாமடியில் "குறிய மாணியுருவாய கூத்தன்" என்றுள்ளது. இங்கு "குறியமாணுருவாகிய" என்று கிடையாது; பொருந்தவும் பொருந்தாது ஆனாலும் இரண்டிடத்திலும் 'குறிய மாணுருவாகிய' என்றே ஸேவித்து வருகிறார்கள்.

3. *புள்ளின்வாய் கீண்டானென்பது பலவிடங்களில் வருகிறது. முதல் திருவந்தாதியில் *நான்ற முலைத்தலை நஞ்சுண்டென்னும் பாட்டில் 'பொருதுடைவு கண்டானும் புள்வாய் கீண்டானும்' என்றுள்ளதே யொழிய 'புள்ளின்வாய் கீண்டானும்' என்று கிடையாது. ஆனாலும் *புள்ளின் வாயென்றே ஓதிவருகிறார்கள்.

4. பெரிய திருமொழியில் (11-2-10) *வென்றி விடையுடன்* என்கிற பாட்டின் இரண்டாமடி "மன்றில் மலிபுகழ் மங்கைமன் கலிகன்றி சொல்" என்றுள்ளது. மேலே (11—8—10) *குன்றமெடுத்தாநிரை காத்தவன்* என்கிற பாட்டின் இரண்டாமடி "மன்றில்புகழ் மங்கைமன் கலிகன்றி சொல்" என்பதேயன்றி இங்கு (மலி) கிடையாது. அந்த விருத்தம் வேறு, இந்த விருத்தம் வேறு. இவ்விடத்திற்கு (மலி) சேராது. ஆயினும் பெரிய திருமொழியின் சாத்துப் பாசுரமான விதனில் (மலி) சேர்த்தே உலகமெல்லாம் ஓதிவருகின்றது. நாலாயிர திவ்யப்பிரபந்தமூலம் பலபதிப்புகள் ஏறியிருக்கின்றதல்லவா ? இப்போது நாம் இங்குக் காட்டிய அபத்த பாடங்கள் எந்தப் பதிப்பிலும் காணக் கிடைக்காது. சிலர் புத்தகங்களை ஊன்றிப்பார்ப்பதேயில்லை; சிலர் பார்த்தாலும் அதைப் பிழையாக நினைத்துவிடுகிறார்கள். நூற்றுவரில் ஒருவரிருவர் இப்பிழைகளையகற்றி ஸேவிப்பவர்களிருக்கக்கூடும். பெரும்பாலும் பிழைகள் ஸமரூபமாகவே வியாபித்திருக்கின்றன இங்ஙனே யெடுத்துக் காட்டாகக் கூடிய பிறழ்வுகள் அனேகமுண்டு. தனித்தனி சொற்களில் நேர்ந்துள்ள பிழைகளோ அபரிமிதம். ஒன்றே காட்டி நிற்கிறேனிங்கு.

'தெரியில்' என்று ஒரு சொல்; 'தெரியல்' என்று வேறொரு சொல். தெரியில் என்பதற்கு 'தெரிந்தால்' என்று பொருள். 'தெரியல்' என்பதற்கு மாலை யென்று பொருள். திருப்பாவை முப்பதாம் பாட்டில் 'அணி புதுவைப் பைங் கமலத்தண் தெரியல் பட்டர்பிரான்' என்பது உள்ள பாடம். இங்கே தெரியிலுக்கு ப்ரஸக்தியே கிடையாது. ஆனாலும் தெரியில் என்று ஸேவிப்பவர்களே மலிந் துள்ளார்கள். "உன்றன்னோடுற்றோமே யாமோம் என்பது போன்ற பாடங் களுக்கு எண்ணிக்கையேயில்லை. தற்போது இவ்வளவில் நிற்போம்.

---

## ஸ்ரீபதரிகாச்ரம யாத்திரை

முற்காலத்தில் பதரிகாச்சிரமம் சென்று ஸேவிப்பது மிகவும் ச்ரமஸாத்ய மாயிருந்தது ஹரித்வாரம் ஹ்ருஷீகேசம் வரையில் ரைல்மார்க்கம் ஏற்பட் டிருந்தாலும் அதற்குப்பிறகு ஏறக்குறைய 180 மைல் நடந்து செல்லவேண்டிய கஷ்டமிருந்த காலத்தில் நமது நாட்டினர் அதிகமாக வதரியாத்திரை செய்ய முன்வரவில்லை. நாளடைவில் ஹ்ருஷீகேசத்திலிருந்து சிறிது சிறிதாக பஸ்ஸௌகரியம் ஏற்படத் தொடங்கிற்று. முதலில் தேவப்ரயாகை வரையில் ஏற்பட்டது. பிறகு கீர்த்தி நகர் வரையில். அதன்பிறகு இடையில் மூன்று மைல் விட்டு ஸ்ரீநகரிலிருந்து கர்ணப்ரயாகைவரையில். அதன்பிறகு சமோலி வரையில்; அதன்பிறகு பிப்பல்கோடி வரையில். ஸமீப காலத்தில் ஜோஸிமட் வரையிலும் பஸ்போக்குவரத்து ஏற்பட்டுவிட்டது. அங்கிருந்து பத்தொன்பதே மைல் பதரிகாச்சிரமம். அடுத்த வருஷத்தில் பூர்த்தியாகவே ஏற்பட்டுவிடும். அது நிற்க. இப்போது ஹரித்வாரத்திலிருந்து அல்லது ஹ்ருஷீகேசத்திலிருந்து மூன்றாவது நாளில் ஜோஸீமட் சேரும்படியான ஸௌகரியம் ஏற்பட்டுவிட்டது. அங்கிருந்து அடுத்தநாளிலேயே வதரிவணங்க ப்ராப்தமாகிறது. இதனால் இப்போது பதரியாத்திரை செல்பவர்கள் அதிகமாகத் தேறுகிறார்கள்.

இதில் முக்கியமாக நாம் தெரிவிப்பது யாதெனில்; இவ்விதமாக யாத்திரை செய்வதில் யாதொரு ரஸமுமில்லை. வதரியைக் காட்டிலும் வதரியின் மார்க்கமே மிகச்சிறந்தது. திருமாலிருஞ்சோலையை வருணிக்கின்ற பெரி யாழ்வார் "ஆயிரமாறுகளும் சுனைகள் பலவாயிரமும், ஆயிரம் பூம்பொழிலு முடை மாலிருஞ்சோலையதே" என்று அருளிச் செய்கிறார். அங்கு பூம்பொழில் களைக் காண்கிறோமே யொழிய ஆயிரமாறுகளையும் பலவாயிரம் சுனைகளையும் நாம் காணப்பெறுகின்றிலோம். பதரிகாச்ரம மார்க்கத்திலோ வென்னில் இவற்றை மிக வதிகமாகவும் காணா நின்றோம். அந்த வழியின் போக்யதை வாசாமகோசரம். காலை வேளைகளில் ஐந்தாறு மைலும், மாலை வேளைகளில் ஆறேழு மைலுமாக நடந்து சென்று ஸேவிப்பவர்களுக்கு உண்டாகுமானந்தம் அவரவர்களின் உள்ளத்திற்கே தெரியவரும்.

எவ்விடத்தில் சிரமம் தோன்றினாலும் அங்கே தங்குவதற்கு வழி முழுவதும் ஸௌகரியமிருக்கின்றது. அப்படி தங்குமிடங்களுக்கு சட்டி யென்று பெயர். நூற்றுக்கணக்கான சட்டிகளிருக்கின்றன. எவ்விடத்திலும் எவ்வித மான பயமும் கிடையாது. இரவிலும் வழிநடந்து செல்லலாம். அர்ச்சிராதி மார்க்கமென்று நாம் சாஸ்த்ரங்களாலறிகிறோம். ப்ரத்யக்ஷமான அர்ச்சிராதி மார்க்கம் பதிரிகாச்ரமமார்க்கமே.

அடியேன் மூன்றுவிசை வதரியாத்திரை செய்தேன். முதல் யாத்திரை செய்தபோது பஸ்மார்க்கம் அதிகமாக ஏற்பட்டிருக்கவில்லை. அப்போது

தண்டிகையில் பயணமென்று பெயர்வைத்துக் கொண்டாலும் பெரும்பாகம் நடந்தே சென்றேன். அப்போது உண்டான ஆத்மாநந்தம் அளவிடமுடியாதது. ஒரு ஸமயம் வதரி ஸேவித்துத் திரும்பி வருகையில் கீர்த்திநகர் வந்து சேர்ந்த பின், அங்கிருந்து தேவப்ரயாகை வரையில் வழியில் மண்மேடுகள் சரிந்து விழுந்து பஸ் போக்குவரத்து தடைபட்டிருந்தது. அதனால் கீர்த்திநகரிலிருந்து தேவப்ரயாகைக்குக் குறுக்கு வழியில் நடந்து செல்ல நேர்ந்தது. காலை 15 மைல் நடந்து ஒரு சட்டியில் விச்ரமித்து ஸ்நான போஜநாதிகளை முடித்துக் கொண்டு மாலை 15 மைல் நடந்துசென்று தேவப்ரயாகை சேரலாயிற்று. அப்போது அடைந்த ஆனந்தத்தை அநுதினமும் அநுஸந்திக்கின்றேன். இங்ஙனே குறுக்குவழிகள் ஆங்காங்கு பலபலவுண்டென்று கேள்விப்பட்டேன். அந்த வழிகளிலெல்லாம் ஸஞ்சரிக்க ஆசையுண்டாயிற்று. ப்ராப்தமான வழியிலும் ஸஞ்சரியாமல் பஸ்ஸில் ஏறிப் பலகாதங்களை இரண்டு மூன்று மணிகளில் கடந்துவிடுவதென்பது வதரியாத்திரைக்கு உற்றதன்று. ப்ராப்யஸ்தலத்தோடு மார்க்கஸ்தலத்தோடு வாசியற்றிருப்பதை உணரவேணும்.

வடதிருவேங்கட யாத்திரையும் இப்போது பஸ்வஸதி ஏற்பட்ட பின்பு நொடிப்பொழுதில் முடிவதாயிருக்கின்றது. எனினும் பல பக்தர்கள் படிவழியே ஏறிச்சென்று களிக்கும் படியைக் காணுநின்றோம். இஃது எப்படியாயினுமாகுக; பதரிகாச்ரம மார்க்கத்தின் ராமணீயகமும் போக்யதையும் அநந்ய ஸாமாந்யமென்னத்தட்டில்லை. "நெறிபடவதுவே நினைவது நலமே" என்று திருமாலிருஞ்சோலையைப் பற்றி ஆழ்வாரருளிச் செய்தது இதற்குமொக்கும் .... *

---

## ஸ்ரீஸ்ரீஸ்ரீ ராஷ்ட்ரபதி

# H. H. E. ராஜேந்திர ப்ரஸாத ஸம்பாஷணை

---

21—8—59 தேதியன்று பகல் 11-45 முதல் 12-20 வரைக்கும் ஸிகந்தராபாத் ஸமீபம் பொலாரம் என்னுமிடத்திலுள்ள ராஷ்ட்ரபதி நிலயத்தில் மகாகனம் ராஷ்ட்ரபதியவர்களோடு ஸம்பாஷிக்க நேர்ந்த மஹாபாக்யத்தைப் பற்றி ஸம்க்ஷேபமாகத் தெரிவிக்கலாகிறதிங்கு. டில்லியில் வாழும் மஹானொருவர் மூலமாக நம்முடைய ஸம்ஸ்க்ருத நூல்களையும் ஹிந்தீ நூல்களையும் காணப்பெற்றுக் களிப்படைந்த ராஷ்ட்ரபதியவர்கள் 21—8—59ல் 11-45 மணிக்கு பொலாரத்தில் ராஷ்ட்ரபதி நிலயத்தில் ஸந்தித்துப்பேச அவகாசமளித்திருந்தார்கள்.

"ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்ய த்வே பலே அம்ருதோபமே, கதாசித் கேசவே பக்திஸ் தத்பக்தைர் வா ஸமாகம:" என்ற ப்ரஸித்தமான ச்லோகத்தில் கடைசி பாதத்தில் வா என்றதற்கு எம்பெருமானார் ஏவகாரார்த்த மருளிச்செய்தாரென்று *பயிலுஞ்சுடரொளி* திருவாய்மொழியின் ஈட்டுப்ரவேசத்தில் காண்கிறது. "தத்பக்தைர் வா ஸமாகம:" என்றதற்கு 'தத்பக்தைரேவ ஸமாகம:' என்று பொருள்கொண்டபடி. இப்பொருளில் யாதுசுவை யென்பதை விவரித்துக் காட்டும் அரும்பதவுரைகாரர் "ராஜைவ த்ருஷ்ட:" என்னும் வாக்யத்தை யெடுத்துக்காட்டி "ராஜாவையே கண்டேனென்றால் தௌர்லப்யம் தோற்றுமிறே" என்றுரைத்தார். அரசனது மாளிகையைக்காண விரும்பிச் சென்றாரொருவர்; அவரைப்பார்த்து 'இது உனக்கு அஸாத்யம்' என்றார் ஒரு பெரியவர். ஆயினும்

அவர் துணிந்துசென்று மாளிகையையும் மன்னவனையும் கண்டு திரும்பினர். அவரை நோக்கி அப்பெரியவர் 'அரண்மனையைக் கண்டீரோ?' என்று கேட்க, அதற்கு அவர் 'ராஜைவ த்ருஷ்ட:'—அரசனையே கண்டுவிட்டேன் என்றார். இவ்விடத்தில் ஏகாரமானது அருமையைக் காட்டிற்றாகும். இவ்வரியபெரிய பயன் கைகூடிற்றெமக்கு.

*ரிக்தஹஸ்தஸ் து நோபேயாத் ராஜாநம்* ஆகையாலே ஐந்து ச்லோகங்களை யெழுதியச்சிட்டு அதனையே காணிக்கையாகக்கொண்டு செல்ல நேர்ந்தது. பரஸ்பரம் யோகக்ஷேம விசாரங்களுக்குப்பின் அந்த ச்லோகமாலிகையை உச்சஸ்வரத்துடன் வாசித்து ஹிந்தியில் விரிவாக உரைசெய்ய ப்ராப்தமாயிற்று. இதில் இருபது நிமிஷங்கள் கடந்தன. அந்த ச்லோகமாலிகை இத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது.

பிறகு நடந்த ஸம்பாஷணை வருமாறு;

**ராஷ்ட்ரபதி** :—இவ்வளவு தாராளமாக ஹிந்தியில் பேசும்படி எங்ஙனே பயிற்சியுண்டாயிற்று?

P. B. A. :—இளமை தொடங்கி வடநாட்டு ஸஞ்சாரப்ரஸக்தி ஏற்பட்டபடியால் இயற்கையாகவே அமைந்த தென்னலாம். ஹிந்தியில் சில நூல்களும் இயற்றியச்சிட்டிருக்கிறேனே; ஸம்முகத்திற்கும் அனுப்பியிருந்தேனே.

**ராஷ்.** :—அவையெல்லாம் கிடைத்தன. ஸம்ஸ்க்ருத பாகங்களைமட்டும் ஸமயங்களில் வாசித்துவருகிறேன் ............ப்ரதிவாதிபயங்கரம் என்கிற பெயர் பயங்கரமாகவே யிருக்கிறது (என்று சிரிப்புடன்).

P. B. A. :—ப்ரதிவாதிபயங்கரமென்பது பெயர் அல்ல; எமது குலத்தலைவருக்குக் கிடைத்த டைடல். அது பரம்பரையாய் குடும்பப்பெயராக வழங்கி வருகிறது. இந்த ப்ரஸங்கத்தில் "ப்ரஸித்த: பரகோஷ்டீஷு பரவாதிபயங்கர:, ஸ்ரீவைஷ்ணவாநாம் கோஷ்டீஷு தத்தாஸ இதி விச்ருத:" என்கிற கூடஸ்தருடைய அநுஸந்தானம் சிறிது விரித்துரைக்கப்பட்டது.

**ராஷ்.** :—காஞ்சியில் நியதமாக என்ன காரியம் செய்துவருகிறீர்கள்.

P. B. A. :—1913ஆண்டில் வேதவேதாந்தவைஜயந்தி யென்னும் வைதிக பாடசாலையை ஸ்தாபித்து நடத்திவருகிறேன். தமிழ் தெலுங்கு ஸம்ஸ்க்ருத பாஷைகளில் மாதாந்த பத்ரிகைகள் நான்குநடத்திவருகிறேன். தமிழில் 340 நூல்களும், ஸம்ஸ்க்ருதத்தில் 70 நூல்களும், தெலுங்கு ஹிந்திகளில் 80 நூல்களும் எழுதியச்சிட்டிருக்கிறேன். எங்களுடைய த்ராவிட வேதத்தையும் அதன் வியாக்கியானங்களையும் ஸம்ஸ்க்ருதத்தில் மொழிபெயர்ப்பதை முக்கிய காரியமாகக் கொண்டிருக்கிறேன்.

**ராஷ்.** :—(பக்கத்திலிருந்த ப்ரைவேட் ஸெக்ரிடெரிகள் இருவருடன் ஆங்கிலத்தில் ஸந்தோஷமாகப் பேசிவிட்டு) காஞ்சியில் ஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் இருக்கிறார்களா?

P. B. A. :—பிராசீன பண்டிதர்கள் தவிர நவீந பண்டிதர்கள் விசேஷமாக ஏற்படுவதற்கு மார்க்கமில்லாம லிருக்கிறது. ராஜாங்கம் ஸம்ஸ்க்ருதபாஷாபிவிருத்தியில் மிக்க ஊக்கங்கொண்டு வேலைசெய்து வருவதால் அதைக்கொண்டு தேறியிருக்கிறோம்.

**ஜய விஜயீபவ!**

श्रीरस्तु । नित्यश्रीः नित्यमंगलम् ॥
श्रियः कान्ताय नमः । श्रीमते रामानुजाय नमः । श्रीमद्वरवरमुनये नमः ॥

# भूमण्डलतिलक सर्वजनमाननीय राष्ट्रपति
# श्रीश्रीश्री राजाधिराज राजसार्वभौम
# *राजेन्द्रप्रसादजी महात्मने*

बोलारम्स्थलीय राष्ट्रपतिनिलये श्रीकाञ्चीप्रतिवादिभयंकर जगदाचार्यसिंहासनाधीश—श्रीमदण्णाङ्गराचार्येण सादरं सबहुमानं समर्पितः पद्यरत्नपुष्पाञ्जलिः ॥

१. जय विजयीभव जय विजयीभव जय विजयीभव राजन् !
जय विजयीभव जय विजयीभव जय विजयीभव देव ! ।
जय विजयीभव जय विजयीभव जयजय मान्य महात्मन् !
जय विजयीभव जय विजयीभव भूतलभास्कर राजन् ! ॥

२. राजन् राजेन्द्र मान्यप्रभुवर भगवन् भारते भूमिभागे
प्रौढः प्रख्यातिभूमा विलसति सुचिरात् श्रेमतो रूढमूलः ।
राजन् ! गैर्वाणवाण्याम् अनुपमसुमहापक्षपातस्समिन्धे
सत्यं भावत्कचित्ते, सच जयतु चिरं मादृशां भाग्यभूम्ना ॥

३. सर्वैर्मद्वंशजातै विरचितसुकृतस्तोमभूम्नाऽद्य राज्ञः
संजाता दिव्यसेवा भवति मम मनः पावनं धन्यधन्यम् ।
श्रेयो भूयो धरित्र्यास्सपदि हि भविता नात्र संदेहगन्धः
किं ब्रूयां देवदेवप्रभुवरकरुणापूरकल्लोलमालाम् ॥

४. राष्ट्रक्षेमविचिन्तनैकनिरत ! प्राचीनधर्माध्वनाम्
अत्यन्तोज्ज्वलहस्तदीपसदृश ! श्रीराजराजेन्द्र भोः ।
धर्मं कार्तयुगं प्ररोहय चिरं विद्यामवद्योज्झिताम्
नित्योज्जृम्भितवैभवां वितनुहि श्रेयांसि संवर्धय ॥

५. श्रेयांसि सर्वाण्यधिजग्मुषस्ते भूयः किमाशास्यमिहास्ति राजन् ।
अनन्यसामान्यसुमान्यधन्या समृद्धिरेषा जयताच्चिरं ते ॥

काञ्चीवादिभयंकरवंशीयाण्णाङ्गरार्यविदुषैवम् ।
पुष्पाञ्जलिस्समार्प्यत राजश्रीराजहस्तराजीवे ॥

इति श्रीकाञ्चीप्रतिवादिभयंकर—अण्णाङ्गराचार्यः २१-८-१९५९ ।
श्रीरस्तु ॥ शुभमस्तु ॥

# ஸ்ரீஜயந்தி யநுபவம்

(ஸ்ரீகாஞ்சி. அண்ணங்கராசாரியர்)

---

ஸ்ரீஜயந்தியின் ஸமீபத்திலே நமது நண்பர்கள் ஸ்ரீராமாநுஜனை வாசிக்க நேர்ந்திருப்பதனால் கண்ணனென்னுங் கருந்தெய்வத்தின் கர்ணாமிருதமான திவ்விய சரிதைகளை அநுபவிக்கத் தருகின்றோம். பெரும்பாலும் நம் ஆழ்வார்கள் அநுபவித்த துறையில் அமைத்துத் தருகின்றோம்.

## கண்ணபிரான் திருவவதாரம்

அவதாரம் என்னுஞ் சொல்லுக்கு இறங்குவது—கீழேயிழிதல் என்று பொருள். மேலான நிலைமையைவிட்டுத் தாழ்வான நிலைமையை ஏற்றுக் கொள்ளுதலே அவதாரம் என்றதாயிற்று. எங்குமுளன், என்றுமுளன், எல்லாப் பொருள்களாயுமுளன் என்ன நிற்பதே எம்பெருமானுக்கு மேலான நிலைமை யாகும். அந்நிலைமையினின்று நீங்கி, குறிப்பிட்ட வோரிடத்திலுளனாகவும் குறிப் பிட்டவொரு காலத்திலிருப்பவனாகவும்,குறிப்பிட்டவொரு திருமூர்த்தியாயுள்ளவ னாகவும் வந்து பிறந்த பிறப்பு அவதாரமெனப்படுவது மிகப்பொருத்தம்.

## அவதாரப் பிரயோஜனம்.

வேதாந்த நூல்கள் எம்பெருமானை ஊனக்கண்ணால் காணத்தகாதவனாக வோதுகின்றன. *ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம்* என்றும் *ந மாம்ஸசக்ஷுரபி வீக்ஷதே தம்* என்றும் வடமொழிவேதம் கூறுவதுபோலவே தென்மொழிவேத மும் *கண்கள் காண்டற்கரியன்* என்றும் *கட்கிலி* என்றும் கூறுகின்றது. இப்படிப்பட்ட எம்பெருமான் "ஸகலமநுஜநயநவிஷயதாம் கத:" என்று கீதாபாஷ்யப்ரவேசத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்கிறபடியே எல்லாருடைய கண்ணுக்குமிலக்காகி அவதாரம் செய்வது எதற்காகவென்னில்; கீதையில் நான்காமத்யாயத்தில் அப்பெருமான்தானே அவதாரப்ரயோஜனத்தை அருளிச் செய்துவைத்தான்;

> "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்,
> தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே."

என்கிற சுலோகம் அவதாரப்ரயோஜனத்தைக் கூறுமது. ஸாதுக்களை ரக்ஷிப் பதற்காகவும் துஷ்டர்களை யொழிப்பதற்காகவும் தருமநெறியை ஸ்வாநுஷ்டா னத்தாலே நிலைநிறுத்துவதற்காகவும் தான் வந்து பிறப்பதாகச்சொல்லிவைத் தான். இக்காரியங்களை அவதரித்தே செய்யவேணுமோ? ஸங்கல்ப மாத்திரத் தாலே அனைத்தையும் நிர்வஹிக்கவல்லவனன்றோ அவன். அத்தகைய சக்தி வாய்ந்த அவன் *நாட்டில் பிறந்து படாதனபட்டு* என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடியே படாதபாடுகளும் படும்படி நாட்டில் வந்து பிறக்கவும் வேணுமோ? என்று ஒரு சங்கை தோன்றும். இங்கு நம் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்வது கேளீர்; துஷ்டர்களைத் தொலைப்பதென்கிற காரியம் ஸங்கல்பமாத்திரத்தினால் ஸாதித்து விடவுங்கூடும்; ஸாதுபரித்ராணம் அப்படி ஸாதிக்கமுடியாது; ஏனென்றால் எம்பெருமானை நேரில்காணவேணு மென்றும் கண்டுபேசவேணுமென்றும் தழுவிமுழுசிப்பரிமாறவேணுமென்றும்

விரும்புமவர்களே ஸாதுக்களாதலால் அன்னவர்களை ஸம்ரக்ஷிப்பது ஸங்கல்ப ஸாத்யமாகாது என்றார் ஸ்ரீபாஷ்யத்தில். துஷ்டர்களைத் தொலைப்பதுங்கூட ஸங்கல்பஸாத்யமாகாதென்று கருதினர் நஞ்சீயரென்னுமாசிரியர்;

"ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம்
பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச் செய்வர்"

என்கிற ஸ்ரீவசநபூஷணசூர்ணையின் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலே அது காணத்தக்கது.

## ஆழ்வார்களும் ஆண்டாளும் அருளிச்செய்த அவதாரப்பிரயோஜனம்

*சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த* என்றும், *மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்த* என்றும் இங்ஙனேகீதையையடியொற்றி அருளிச்செய்திருக்கச் செய்தேயும் ரஸோக்தியாக வேறு சில பிரயோஜனங்களையும் அருளிச்செய்திருக்கக் காண்கிறோம்; *காளுயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்றவாளுயன்* என்கிறார் திருமங்கையாழ்வார்; திருவாய்ப்பாடியில் தயிரும் நெய்யும் பாலும் வெண்ணெயும் பாழ்படாமே அவற்றைப் பருகுவதற்காகவே கண்ணன் திருவவதாரமென்கை. கோபிகளின் பேச்சாலே பேசுகின்ற நம்மாழ்வார் *இன்று இவ்வாயர்குலத்தை வீடுய்யத்தோன்றிய கருமாணிக்கச் சுடர்* என்று திருவாய்ப்பாடியை ஸத்தைபெறுவிப்பதற்காகவே கண்ணனவதரித்ததாகக் கூறினர். கோபிகளின் ஸமாதியாலே பேசுகின்ற ஆண்டாளோவென்னில் *கஞ்சன் வலை வைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து, நெஞ்சுதுக்கஞ் செய்யப் போந்தாய் நின்றவிக்கன்னியரோமை* என்கிறாள்—கம்ஸனிட்ட காவலுக்குத் தப்பிப் பிழைத்துத் திருவாய்ப்பாடியில் வந்துசேர்ந்தது கோபிமார்களைத் துன்பப்படுத்தவேயென்கை. இவையெல்லாம் ஸம்ப்ரதான பிரயோஜனங்களேயென்று கொள்ளத்தகும். ரஸோக்தி விசேஷங்களிருந்தபடி.

## அவதாரத்தில் நம்மாழ்வார்கண்டதோர் அற்புதம்

திருவிருத்தத்தில் *சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தராநிற்கவேயங்கு, ஓர் மாயையினலீட்டியவெண்ணெய் தொடுவுண்ணப்போந்து இமிலேற்று வன் கூன் கோட்டிடை யாடினை கூத்து அடலாயர்தங் கொம்பினுக்கே* என்றுள்ளபாட்டு நம்மாழ்வாருடைய விலக்ஷண ஸாக்ஷாத்காரம். "முந்நீர் வாழ்ந்தார் சூட்டும் கோவையாழியென்கிற ஸாக்ஷாத்க்ருத ஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையைக்காண்பது. திருநாட்டில் நித்யஸூரிகள் பரமபதநாதனுக்கு நீராட்டம் கண்டருளப்பண்ணித் தூபம்ஸமர்ப்பிக்கும்போது புகையினால் திருமுகமண்டலம் மறையும்; பிறகு தீபம் ஸமர்ப்பிக்கும்போது திருமுகமண்டல ஸேவையாகும். இந்த தூபதீபங்களினிடையில் அப்பரமபதநாதன் விண்ணுலகில் நின்றும் மண்ணுலகில்வந்து கண்ணனாயவதரித்து "பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரியபாரதம் கைசெய்து" என்னும்படியான ஸகலகாரியங்களையும் தலைக்கட்டிக்கொண்டு, (விண்ணுலகில்) தீபாராதனையாகும்போது திருமுகமண்டல ஸேவைகாட்டஸித்தனாயிருக்கிறபடி. இதனால், ஸாக்ஷாத் பரமபதநாதனே கண்ணபிரானாக வந்துபிறந்தவனென்பதும், திருநாட்டில் நடைபெறும் திருவாராதனத்தின் வைலக்ஷண்யமும் தெரிவிக்கப்பட்டவாறு. இவ்விரண்டனுள் முந்தினவிஷயமே முக்கியமானது.

## கண்ணன் திருவவதார நக்ஷத்திரம்

கண்ணபிரான் திருவவதரித்தது ரோஹிணீ நக்ஷத்திரமென்பது புராண ப்ரஸித்தமும் ஜகத்ப்ரஸித்தமுமாம். இவ்வவதாரத்தில் விசேஷித்து ஈடுபட்டவரான பெரியாழ்வார், திருவோணத்தில் அவதரித்ததாகப் பலவிடங்களிலருளிச் செய்கிறார். *அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்* *நின்றமராமரம் சாய்த்தாய் நீ பிறந்த திருவோணம் இன்று நீ நீராடவேண்டும்* *திண்ணார் வெண் சங்குடையாய்! திருநாள் திருவோண மின்றேழுநாள்* என்பன அவருடைய பாசுரங்கள். இங்ஙனேயருளிச்செய்வது எங்ஙனே பொருந்துமென்று சிந்திக்க வேண்டா. அழகிய சிங்கர் அவதரித்தது ஸ்வாதிநக்ஷத்திரமாயிருக்கச்செய்தேயும் *திருவோணத் திருவிழவிலந்தியம் போதிலரியுருவாகி* என்று அவரையும் திருவோணத்திலவதரித்தவராக அருளிச்செய்தவரல்லரோ பெரியாழ்வார். *வேதப்பயன் கொள்ளவல்ல விட்டு சித்தன் வேதத்தையடியொற்றியருளிச் செய்தாரென்பது தத்துவம். யஜுர்வேதத்தில் நாலாவது காண்டத்தில் நாலாவது ப்ரச்நத்தில் ஸகல நக்ஷத்திரங்களுக்கும் தேவதைகளைக் கூறுமிடத்து "ச்ரோணு நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா" என்று ஓதப்பட்டுள்ளது. ஸ்ரீமஹாவிஷ்ணுவின் நக்ஷத்திரம் திருவோணமேயாகும். எம்பெருமான் எந்தப் புஷ்பத்தைச் சாத்திக்கொண்டாலும் அதில் திருத்துழாயின் அம்சம் பொருந்தியிருக்குமாபோலே. அப்பெருமான் எந்த நக்ஷத்திரத்தில் அவதரித்தாலும் அது திருவோணத்தின் அம்சம் பொருந்தியதாகவே யிருக்குமென்பது ஆழ்வாருடைய திருவுள்ளம். ஆகவே *நீபிறந்த திருவோணம்* என்றருளிச்செய்ததும் *திருவோணத்திருவிழவில் அரியுருவாகி* என்றருளிச்செய்ததும் பொருத்த முடைத்தேயாகும். *அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்* என்பதற்கு ரோஹிணீ நக்ஷத்திரமென்று சிலர் பொருள் கூறுவதுண்டு; ஹஸ்தம் சித்திரை ஸ்வாதியென்று மேல்முறையாக எண்ணிக்கொண்டு போனால் அத்தத்தின் பத்தாநாள் திருவோணமாகுமாயினும், ஹஸ்தம், உத்தரம், பூரம், மகம்............ என்று கீழ்முறையில் எண்ணிக்கொண்டுபோனால் பத்தாநாள் ரோஹிணியாகுமன்றோ. இதையொரு சமத்காரப்பொருளாகக் கொள்ளலாம்.

## அவதாரஸமயக் காட்சி

கண்ணபிரான் வஸுதேவர்திருமாளிகையில் சிறைக்கூடத்தில் திருவவதரித்தபோது "ஜாதோஸி தேவதேவேச சங்கசக்ரகதாதர!" என்று போற்ற நின்றான். பஞ்சாயுத திவ்யாபரண பூஷிதனாய்க்கொண்டு திருவவதரித்தனாகவோதிற்று. வேறு எந்த அவதாரமும் இங்ஙனே நிகழ்ந்ததாகக் கேட்டிலோம். இவ்வவதாரம் இங்ஙனே யானதற்கு ஹேது வொன்றுண்டு; இதற்கு முந்தின அவதாரம் தசரதராமாவதாரம். அதுதன்னில் ராவணவதஸமனந்தரத்தில் மந்தோதரி புலம்பிக்கொண்டே ப்ரேதனை இராவணனைக் குறித்துப் பலபலவும் கூறுகையில் "தமஸ: பரமோ தாதா சங்கசக்ரகதாதர:" என்றாள். அப்போது பெருமாள் சங்கசக்ரகதாதரராக இல்லை. ஆயினும், அவள் தன் காட்சியில் கண்டவாறு பேசினாள். அது பெருமாள் திருச்செவியில் விழுந்தவளவில் அவர்தமக்குச் சிறிது லஜ்ஜையுண்டாயிற்று. 'ஐயோ! வெறுங்கையனான வென்னை இவள் சங்கசக்ரகதாதர னென்கிறாளே; *எப்போதும் கைகழலா நேமியான்* என்று இவள் நம்மையறிந்து கொண்டாலும் நாம் இங்ஙனே யிருக்கை தவிர்ந்தோமே; போனது போகுக. இனி அடுத்தபிறவியில் சங்கசக்ரகதாதரனாகவே பிறப்பேனாக' என்றும் அப்போது ஸங்கல்பித்தார். அடுத்த அவதாரம் க்ருஷ்ணாவதாரமாகையாலே அது தன்னில் "ஜாதோஸி தேவதே

வேச சங்கசக்ரகதாதர" என்னும்படி அவதரிக்கலாயிற்று. வான்மீகி முனிவர் வாக்கில் 'சங்கசக்ரகதாதர:' என்று முதல் வேற்றுமையாக வந்த சொல் தொடர் தானே பராசரமுனிவர் திருவாக்கில் விளியுருபு ஏற்று வந்தது.

## பிறந்தவன்றே தந்தைதாயர் சொற்பேணுதல்

மாத்ருவாக்ய பித்ருவாக்ய பரிபாலனங்களைக் குறையறச் செய்தவரென்கிற புகழ் ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனுர்க்கே உள்ளதென்று பலர் கருதுவர், கூறுவர். கண்ணபிரான் *தாயர்வாய்ச்சொல் கருமங்கண்டாய் சாற்றிச் சொன்னேன் போகவேண்டா* *தாய்சொல்லுக் கொள்வது தன்மங்கண்டாய் தாமோதரா விங்கே போதராயே* *சோத்தம் பிரானென்று இரந்தாலுங் கொள்ளாய்* என்னும்படி தாயர்வாய்ச்சொல் கேளாதவன் என்று இவன்பால் குறைகூறுவதுமுண்டு. இங்கு நம் ஆசாரியர்கள் தத்துவமுணர்ந்து பேசியிருப்பதாவது—

"பெருமாள் பக்வரான பின்பாயிற்று மாதாபித்ருவாக்ய பரிபாலனம் பண்ணிற்று; நம் கண்ணபிரான் பிறந்த வன்றேயன்றோ அது செய்தது. 'உபஸம்ஹர விச்வாத்மந் ரூபமேதச் சதுர்ப்புஜம்' என்று வஸுதேவதேவகிகள் வேண்டினவாறே ஆழ்வார்களை [—திருவாழி திருச்சங்காழ்வார்களை] மறைத்துக்கொண்டானிறே" என்று.

## திருவாய்ப்பாடிபயணத்தில் காட்டிய விசேஷங்கள்

கண்ணபிரான் திருவவதரித்தது வடமதுரையிலே; உடனே சென்று சேர்ந்தது திருவாய்ப்பாடியிலே. ஸ்ரீக்ருஷ்ண திவ்யசிசுவை வஸுதேவர் தாமே சுமந்துகொண்டு சென்று திருவாய்ப்பாடியிலே விட்டுவந்தார். அப்போது ஆவணி மாதமாகையாலே கனமழை பெய்துகொண்டிருக்கின்றது. எமுனையில் வெள்ளமோ ஆகாயமளாவிப் பெருகாநின்றது. இந்த நிலைமையில் வஸுதேவர் ஆறு கடந்து எங்ஙனே சென்றார்? தெய்வக்குழவி மழையில் நனைந்து வருந்தாதபடி யிருந்ததா? என்னில்; இங்குப் பராசரமஹர்ஷி கூறுகின்றார்.

"யமுநாஞ்சாதிகம்பீராம் நாநாவர்த்தஜஷாகுலாம்,
வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ." என்று.

அப்போது வஸுதேவர்க்கு எமுனையாறு தன்னை முழங்காலளவாக வற்றிக் கொடுத்ததாம். இதைக்கொண்டே ஆண்டாள் *தூயபெருநீர் யமுனை* என்றாள். ஸ்ரீராமாயணத்தில் கோதாவரியின் கதையைக் காண்கிறோம். "ஹம்ஸகாரண்டவாகீர்ணாம் வந்தே கோதாவரீம் நதீம். க்ஷிப்ரம் ராமாய சம்ஸ த்வம் ஸீதாம் ஹரதி ராவண:" என்று ஸீதாபிராட்டி கோதாவரியை நோக்கி வேண்டினாள்— தன்னை ராவணன் அபஹரித்துக்கொண்டு போகிறானென்பதைப் பெருமாளுக்குச் சொல்லவேணுமென்றாள். ராவணபயத்தாலே கோதாவரி தெரிவிக்கவில்லையென்று புராணம் கூறுகின்றது. உண்மையில் ராவணனிடத்து அஞ்சவேண்டிய ப்ரஸக்தியேயில்லை கோதாவரிக்கு. வீணாகவே அஞ்சினபடி. எமுனை தான் கம்ஸனுடைய மாளிகையின்கீழே பெருகாநிற்கச்செய்தேயும் சிறிதும் அஞ்சாது கண்ணபிரானுக்குக் கிஞ்சித்கரித்தமையினால் மிக்க தூய்மை பெற்றபடி.

## யாதவாப்யுதயஸூக்தி விசேஷாநுபவம்

கண்ணன் மதுரையினின்று திருவாய்ப்பாடி சேர்ந்த வரலாற்றை யாதவாப்யுதய காவியத்தில் கூறுகின்ற வேதாந்தவாசிரியர் வெகு அற்புதமாகக் கூறினர், ஒரு சுலோகத்தினால்; (அது வருமாறு)

" அக்ருதஸேதும் அநாகலிதப்லவாம் ஜநநஸிந்துத்ருடப்லவ முத்வஹந்,
ரவிஸூதாமதிலங்க்ய ரமாபதிம் ஸபதி கோஷஸமீபமுபாநயத் "

என்பது மிகச்சிறந்த சுலோகம். உலகில் பெருவெள்ளத்தைக் கடந்துசெல்ல வேண்டுவார் ஸேதுகட்டியோ தெப்பத்தைப் பற்றிக்கொண்டோ செல்லுவர். அவ்விருவகை ஸாதனமும் இங்கு இல்லை. வஸுதேவரால் கொண்டுபோகப் படுகிற வஸ்துதான் ஸேதுவும் தோணியுமாயிருந்தது. பகவானை *அம்ருதஸ்யைஷ ஸேது:* என்று உபநிஷத்து ஓதிற்று. *விஷ்ணுபோதம்* என்று மஹர்ஷிகளும் *வைகுந்தனென்பதோர் தோணி* என்று ஆண்டாளும் கூறினர். ஆக, தோணியினுடையவும் ஸேதுவினுடையவும் வலிமைகொண்டே வஸுதேவர் கண்ணனைக் கொண்டுபோனாரென்றதாயிற்று.

## வஸுதேவதேவகிகளின் தௌர்ப்பாக்யமும் நந்தகோபயசோதைகளின் ஸௌபாக்யமும்

வஸுதேவதேவகிகள் கண்ணபிரானை மகனாகப் பெறப்பெற்ற பாக்ய சாலிகளேயானாலும் அவனது திவ்யாத்புத சேஷ்டிதங்களில் ஏகதேசமும் அநுப விக்கப்பெற்றிலர்கள். *பிள்ளை செய்வன காணாத் தெய்வத் தேவகி புலம்பிய புலம்பலைக் குலசேகராழ்வார் கல்லுங் கரையப் பேசியுள்ளார்.

1. என்வாயிடை நிறையத் தாலொலித்திடும் திருவினையில்லாத் தாயரில் கடையாயின தாயே.
2. ஆலினையிற்கிடந்த கிடக்கை கண்டிடப்பெற்றிலே னந்தோ! கேசவா கெடு வேன் கெடுவேனே.
3. நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற் றிலனே.
4. அளவில் பிள்ளைமை யின்பத்தை யிழந்த பாவியேன் எனதாவி நில்லாதே.
5. திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே.
6. வண்ணச் செஞ்சிறு கைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்ட அடிசிலின் மிச்சல் உண்ணப் பெற்றிலேன் ஓ கொடுவினையேன்!
7. வாயிலே முலையிருக்க என் முகத்தே யெழில்கொள் நின் திருக்கண்ணிணை நோக்கந் தன்னையுமிழந்தே னிழந்தேனே.
8. அழுகையு மஞ்சிநோக்கு மந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப் பதுவும் தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாளே.
9. வென்றிசேர் பிள்ளை நல்விளையாட்டமனைத்திலும் அங்கென்னுள்ளமுள் குளிர ஒன்றுங் கண்டிடப் பெற்றிலேனடியேன்!

என்றிங்ஙனேயாயிற்றுத் தேவகி புலம்பல். இது வஸுதேவருடைய புலம்பலுக் கும் உபலக்ஷணம். இனி நந்தகோப யசோதைகளின் பாக்ய பரிபாகப்ரணாளி கலை என் சொல்லுவது. ஒரு மஹாகவி நந்தகோபரைப்பற்றிக் கூறினர்—

" ச்ருதிமபரே ஸ்ம்ருதிமபரே பாரதமபரே பஜந்து பவபீதா:
அஹமிஹ நந்தம் வந்தே யஸ்யாளிந்தே பரம் ப்ரஹ்ம."

என்றார். ச்ருதிகளோ ஸ்மிருதிகளோ பாரதமோ பாகவதமோ எதுவும் எனக்கு வேண்டா. நந்தகோபனென்ருவனையே தஞ்சமாகப் பற்றுவன் நான்; அவன்ற னக்கு வந்த ஏற்ற மென்னென்னில்;

[பரம் ப்ரஹ்ம யஸ்ய அளிந்தே] கண்டூஷம் செய்கிற வாசல் திராங்கிக்கு அளிந்தமென்று பெயர். நந்தகோபனுடைய மனைவாசல் திராங்கியிலன்றோ பரம புருஷன் தவழ்ந்துவிளையாடிப் புரண்டுகிடந்தான். இந்தபாக்கியம் வேறுயார்க்கு எட்டும்? என்றார். நம்மாழ்வார்நந்தகோபனை நிதியெடுத்தவனென்கிறார். "எடுத்த பேராளன் நந்தகோபன்றன் இன்னுயிர்ச் சிறுவனே!" என்றன்றோ கண்ணனை விளிக்கின்றாராழ்வார். உண்மையில் நந்தகோபனுக்குக் கண்ணபிரான்கிடைத்தது ஜன்ம தரித்ரனுக்கு நவநிதிகிடைத்தது போலவேயன்றோ? அவனுக்குக்கண்ணன் கிடைத்தா னென்பது மட்டுமேயோ? அவனைத் தன்னிஷ்டப்படி நியமிக்கும் பாக்கியமுமன்றோ பெற்றிருந்தான். ஒருநாள் மாலைப் பொழுதில் கண்ணன் தெருவிலே சென்று நின்றான்; அப்போது யசோதை கண்ணனை நோக்கி "வானிடைத் தெய்வங்கள் காண அந்தியம்போது அங்கு நில்லேல் ஆழியங் கையனே வாராய்" என்று உள்ளே வருமாறு அழைத்தாள். அவனோ விளையாட்டில் பராக்காலே வந்திலன; அப்போது சொல்லுகிறாளவள்—"உந்த மடிகள் முனிவர் உன்னைநான் என் கையில் கோலால் நொந்திட மோதவுங்கில்லேன்" என்று. பயலே! இப்படி நீ துருதுருக்கையாய் வர்த்திப்பதை உன் ஸ்வாமி கண்டால் உன்னை வெறுமனே விடுவரா? சீறிச் சிவந்து பொடிந்து நிற்பரே. நானும் உன்னையடிக்கக் கோலிக் கையில் கோலையெடுக்கிறேன், ஆனாலும் என் குழகனே அழகனே! உன்னையடிக்கக் கைவரவில்லையே! என்கிறாள். கண்ணனை ஸர்வஸ்வாமியென்று தெரிந்து கொண்டிருந்துமிவள் அவனுக்கும் ஸ்வாமியாக நந்தகோபனை வைத்து "உந்தமடிகள்" என்று சொன்ன அழகு என்னே!

## ஒருதலையில் இழவும் ஒருதலையில் பேறுமானவிதற்கு ஹேது

வஸுதேவதேவகிகள் பெற்றும் பேறிழந்தது என்? நந்தகோப யசோதைகள் அசிந்திதமாக நிகரில்லாப்பேறு பெற்றது ஏன்? என்று சிந்திப்பார்க்குச் சொல்லுகிறோம். வஸுதேவ தேவகிகள் நெடுங்காலம் தவம் புரிந்தனர்—எம்பெருமானே எமக்குப் புதல்வனாகப் பிறக்கவேணுமென்று பலவாண்டு கிடந்து நோன்பு நோற்றனர். இத்தகைய ஸாதநாநுஷ்டானத்தை எம்பெருமான் ஸஹிக்குமவனல்லன். தனது நிர்ஹேதுகக்ருபைக்கு வெற்றியையன்றோ அவன் விரும்புவான். சில விடங்களில் அல்பவ்யாஜமாத்திரத்தை எதிர்பார்ப்பதுமுண்டு மிகக் கனத்த ஸாதநாநுஷ்டானம் காணுமிடத்து அவத்யம் காட்டி நிற்பது அவன் செயல். வஸுதேவருடைய தீவிரமான ஸாதநாநுஷ்டானம் கண்ணபிரானுடைய திருமுகத்திலே விழிக்குமளவுக்குஉதவிற்று. அவனதுதவம் அவ்வளவிலே உபக்ஷீணமாயிற்றென்க. "இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹமுடையவன்" என்று ப்ரஸித்தனான பெருமான் அந்த அருள் வெள்ளத்தை உடனே திருவாய்ப்பாடியில் மடைமாறினன். "நிர்ஹேதுகக்ருபையின் பிரபாவம் இங்ஙனேயாயிற்று இருப்பது!" என்று காட்டினது திருவாய்ப்பாடியிலே.

## இவ்வர்த்தத்தில் வேதபுருஷனுடைய ஸம்வாதம்

வேதம் ஓதுகின்றது—"அந்நவான் அந்நாதோ பவதி" என்று. 'அந்நவாந் பவதி' என்றாலே போதுமே; 'அந்நாதோ பவதி' என்றும் தனிப்பட ஓத வேணுமோ? அன்னம் கிடைக்கப் பெற்றவன் அந்நவான். அவன் தனக்குக் கிடைத்த அன்னத்தைப் புஜிக்கமாட்டானோ? அதைப் புஜிப்பவனாகவுமாகிறானென்று தனிப்படச் சொல்லுவது எதற்காக? என்று சங்கிக்க நேரும். இந்த சங்கையைப் பரிஹரிக்கவே வஸுதேவரும் நந்தகோபரும் தோன்றினர். *அந்நவாந் பவதிக்கு வஸுதேவர் இலக்காய் நின்றார். *அந்நாதோ பவதி-கு

நந்தகோபர் இலக்காய் நின்றார். *அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத்* என்ற சுருதியின் படி அன்னமாகிய பரப்ரஹ்மத்தை வஸுதேவர் வெறுமனே பெற்றாரேயல்லது புஜிக்கப் பெற்றிலர்; அது பெற்றவர் நந்தகோபரேயாவர். இவற்றுக்கு ஹேது. ஒரு தலையில் ஸாதநாநுஷ்டாநப்ராவண்யமும் மற்றொரு தலையில் அஃதில்லாமையுமேயாம். ஸாதநாநுஷ்டானம் செய்யுமாறு சாஸ்த்ரமே விதித்திருக்க அதனைப் பொல்லாங்காகக் கருதுவது கூடுமோ எனின்; எம்பெருமானைப் பெறுதற்கு ஸாதனாநுஷ்டானம் சாஸ்திர ஸம்மதமன்று. *நாஸௌ புருஷகாரேண நசாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்று பகவான் சொல்லி வைத்திருக்கின்றான். காலவிசேஷத்திலே ஒரு அதிகாரி விசேஷத்தைத் தானே தன் இச்சையேயடியாகக் கடாக்ஷிப்பதாகக் கூறியிருப்பதொன்றே வெற்றிபெறும். "கோஸலகோகுல சராசரம் செய்யுங் குணமொன்றின்றியே அற்புதமென்னக் கண்டோம்" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையின் வியாக்கியானம் ஸேவித்துத் தெளிவது.

## கண்ணபிரானுடைய சேஷ்டித போக்யதை

திருவயோத்தியில் திருவவதரித்த இராமபிரானுடைய சரிதையைப் பன்னிரண்டு பிராயமளவும் ஒன்றுமறியப் பெறுகின்றிலோம். விச்வாமித்திர முனிவனது வேள்வி காத்தது முதலாகவே இராமபிரானது சரிதை ஆரம்பமாகின்றது அப்போது இராமனுக்குப் பன்னிரண்டு வயது. அதற்கு முந்தின சரிதைகள் தெரியவருகின்றில. கண்ணபிரானுடைய சரிதைகள் பிறந்தவன்றே தொடங்கி அபரிமிதங்கள். அதிலும் பன்னிரண்டு பிராயமளவும் பேரின்பமும் இன்சுவையும் வடிவெடுத்த சரிதைகள். பிராயம் முதிர்ந்த பிறகு செய்தருளின கீதோபதேசம், பாரதயுத்த நிர்வஹணம் முதலான பெருஞ்செயல்கள் கிடக்க. நம் ஆழ்வார்களின் ஈரச்சொற்களை அப்ரமேயமாக விளைவித்தவை கண்ணபிரானுடைய சிறுச் சேவகங்களேயன்றோ. கண்ணபிரானுடைய திவ்யசேஷ்டிதங்கள் இத்தனை அற்புதமாக அமைந்தில வென்றால் ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் இத்தனையழகு பெற்றிருக்க விரகில்லையே. ஆண்டாள் தன்னுடைய திருப்பாவைக்குக் கண்ணபிரானுடைய கதைகளை இலக்காகக் கொண்டிலளென்றால் "கோதை தமிழ் ஐயைந்துமைந்து மறியாத மானிடரை வையஞ் சுமப்பதும் வம்பு" என்னும்படியான ஏற்றம் அதற்கு ஏற்றிராதே.

## கண்ணபிரானும் பலராமனும்

கண்ணபிரானுடைய திவ்விய சேஷ்டிதங்கள் இவ்வளவு ரஸ்யமாக அமைந்ததற்குக் காரணம் நம்பிமூத்தபிரானோடு [ஸ்ரீபலராமனோடு] சேர்க்கையேயென்று வேதாந்தவாசிரியர் திருவுள்ளம்பற்றுகின்றார். தசாவதார ஸ்தோத்ரத்தில் பலராமஸ்துதி பத்யத்தில்,

"க்ஷீரம் சர்க்கரயேவ யாபிரப்ருதக்பூதா: ப்ரபூதைர் குணை:
ஆகௌமாரகமஸ்வதந்த ஜகதே க்ருஷ்ணஸ்ய தா: கேலய:."

என்று பணித்தது காண்க. கண்ணபிரானோடு பலராமன் கூடியிருந்திலனாகில் கண்ணபிரானுக்கு அபாயங்கள் அபரிஹார்யமாகுமென்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் பலராம ஸ்துதி பத்யத்தில்

"யத்விச்லேஷலவோபி காலியபுவே கோலாஹலாயாபவத்"

என்றருளிச் செய்தது காண்க. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் காளியமர்த்தநம் சொலலத் தொடங்கிய பராசர பகவான் "ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ" என்றார். கண்ணபிரான் நாடோறும் பலராமனோடு கூடவே

விருந்தாவனம் செல்வது வழக்கம்; ஒரு நாள் அவனை விட்டுத் தனியே சென்ருன். அன்றுதான் காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டது. "தமையன் ஒருநாள் பேரநிற்க, தம்பி பாம்பின் வாயிலே புகும்படியாயிற்று" என்பது பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி. இதையே காட்டுவது மேலே யுதாஹரித்த பட்டர் ஸ்ரீஸூக்தி.

நம்பி மூத்தபிரான் ஆதிசேஷாம்சமாகையாலே வெண்ணிறத்தன். கண்ணபிரானே *கண்ணனென்னும் கருந்தெய்வம்* என்று ப்ரஸித்தன். திருவாய்ப்பாடியில் இவ்விருவரும் முன்னும் பின்னுமாக நடந்து செல்லுமழகு,

"முன்னலோர்வெள்ளிப் பெருமலைக்குட்டன் மொடுமொடு விரைந்தோடப்
பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன் பெயர்ந்தடி யிடுவதுபோல்
பன்னியுலகம் பரவியோவாப் புகழ்ப் பலதேவனென்னும்
தன்னம்பியோடப் பின்கூடச் செல்வான்........"

(பெரியாழ்வார் திருமொழி 1—7—5)

என்று வருணிக்கலாயிருந்தது. வெள்ளிமலைக் குட்டியொன்று முன்னே செல்ல, நீலமணி மலைக்குட்டியொன்று அதன் பின்னே செல்லுகின்றதோ! என்றெண்ணலாம்படியிருந்ததாம்.

பலராமனுக்குத் திருவாய்ப்பாடியில் நல்ல பெயர்; அவன் வம்பு தும்பு சேஷ்டைகளொன்றும் செய்வதில்லையென்று ப்ரஸித்தி; இதனை

"மைந்நம்பு வேற்கண்ணல்லாள் முன்னம்பெற்ற வளைவண்ண நன்மாமேனி
தன்னம்பிநம்பியு மிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான்"

(பெரிய திருமொழி 10—7—4)

என்று ஆய்ச்சிகள் சொல்லுவர்கள். *அண்ணற்கண்ணானோர் மகனைப்பெற்ற அசோதை நங்காய்!* என்று யசோதைப்பிராட்டியை விளிப்பர்கள். 'அண்ணற் கண்ணான்' என்பதற்கு இருவகையாகப் பொருள்பணிப்பர்; 'அண்ணல் கண்ணான்' என்று பிரித்து 'இவனேஸர்வஸ்வாமியென்று கோட்சொல்லித்தரவல்ல திருக்கண்களையுடையவன் என்பதொன்று. 'அண்ணற்கு அண்ணான்' என்று பிரித்து அண்ணலான நம்பிமூத்தபிரானுடைய ப்ரக்ருதிக்குச் சேர்ந்திராதவன் என்பது மற்றொன்று. தீம்புசெய்ய அறியானவன்; தீம்பிலே தகணேறுமவன் இவன். நந்தகோபாலனுக்கு ஏற்றம் சொல்லுகிற ஆண்டாள் *கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற நந்தகோபாலன்* என்கிருள்.

கண்ணபிரான் தீமைகள்செய்ய ஆயர்மனைகளிலே புகுவன்; வீட்டிலுள்ளார் புழைக்கடைப்பக்கமாக இருக்கும் ஸமயம் பார்த்து தயிர் பால் நெய் வெண்ணெயுள்ள அறையிலேபுக்கு சேஷ்டைபண்ணுவன். சத்தம்கேட்டு ஓடி வந்து 'பயலே! யார் நீ? என்றுகேட்டால் 'பலராமன் தம்பிநான்' என்பனும் கண்ணன். 'பலராமன் யோக்யனாகையாலே இவனும் யோக்யனாகவேயிருப்பன்' என்றெண்ணிக்கொண்டுபோய்விடட்டுமவர்கள்' என்பது கண்ணன் கருத்துப் போலும். "பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்" என்ற ஆண்டாளருளிச்செயல் ஆண்டாளொருத்தியே பேசத்தகுவதன்றோ. இங்கு கர்ணாம்ருதமான ச்லோகமொன்றைச் சிறிதுரைப்போம்:

"கஸ் த்வம் பால!, பலாநுஜ:, கிமிஹ தே, மந்மந்திராசங்கயா,
யுக்தம் தத் நவநீத பாண்டகுஹரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யதா:?
மாத: கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும், மாகா விஷாதம் க்ஷணாத்
இத்யேவம் வநவல்லவீப்ருதித: க்ருஷ்ணஸ்ஸ புஷ்ணாது ந:"

## கோபீக்ருஷ்ண ஸம்பாஷணை

[ஒருத்தியின் வீட்டினுள்ளே புகுந்து வெண்ணெய்க் குடத்தினில் கையிட்ட கண்ணனைக் கண்டு கோபி கேட்பதும் கண்ணன் விடையிறுப்பதும்.]

கோபி :—(கஸ் த்வம் பால!) பயலே! யாரடா நீ?

கண்ணன் :—(பலாநுஜ:) நான் தெரியாதா? நான் பலராமன் தம்பியல்லவா?

கோபி :—(கிமிஹ தே?) அப்படியா? ஸரி; இங்கு எதற்காக வந்தாய்?

கண்ணன் :—(மந்மந்திராசங்கயா) இப்பாடியில் மனைகளெல்லாம் ஒரேசாயலாயிருப்பதால் என்மனையென்று மயங்கி வந்துவிட்டேன்.

கோபி :—(யுக்தம் தத்! நவநீதபாண்ட குஹரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யதா:?) உன்மனையாக மயங்கி வந்துவிட்டது ஸரிதான்; உள்ளே வந்த பின்பு இது உன்மனையன்று என்று தெரிந்திருக்குமே; அப்படியிருக்க, வெண்ணெய்த் தாழியினுள் கைவைத்தாயே, அது ஏன்?

கண்ணன் :—(மாத:! கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும்) ஆய்ச்சீ? அதைப்பற்றிக் கேட்கிறாயோ? உண்மையுரைக்கின்றேன் கேள். நான் கன்று கறவைகளை மேய்ப்பவனென்பது உனக்குத் தெரிந்திருக்குமே; அக்கன்றுகளில் ஒரு கன்று எங்கேயோ தவறிவிட்டது; அது இங்கே புக்கு ஒளித்திருக்கின்றதோ வென்று தேடிப்பார்க்க இந்தத் தாழியில் கையிட்டேனத்தனை; வேறொன்றுமில்லை.

(இதைக்கேட்ட கோபியானவள் 'பயலே! நீ சொல்வது வெகு நன்றாயிருக்கிறது; கன்று குட்டி கெட்டுவிட்டதாம், அதை வெண்ணெய்த்தாழியில் தேடுகிறாயாம். செய்தி வெகு நன்றாயிருக்கிறது' என்று சொல்லிக்கொண்டே ஓங்கியடிக்கப் புகுந்தாள். உடனே கண்ணன் அழத்தொடங்கினான். அதுகண்ட கோபி இது யசோதைக்கு எட்டுமாகில் என்னாகுமோ என றஞ்சி)

கோபி :—(மா கா விஷாதம் க்ஷணாத்) பயலே! அழேலழேல்; உனக்கு வேண்டிய வெண்ணெய் தருகிறேன், பெற்றுக்கொண்டு அழாதே செல்வாயாக என்றாள். கண்ணன் வெண்ணெயைப் பெற்று உண்டு மிக்க மகிழ்ச்சியோடு வெளியேறினான்.

## கண்ணனும் பெரியாழ்வாரும்

ஆண்டாள் தன் திருத்தகப்பனாரைக் கொண்டாடிக் கூறுமிடத்து *போகத்தில் வழுவாத புதுவையர்கோன்* என்கிறாள். கண்ணபிரானுடைய திவ்விய சேஷ்டிதங்களைச் சிறிதளவும் வழுவாமே யநுபவித்த மஹாபாக்யசாலியானவர் பெரியாழ்வாரொருவரேயென்றாள். இஃது உண்மையுரை. வ்யாஸரோ பராசரரோ சுகரோ எந்த மஹர்ஷியும் பெரியாழ்வாரைப்போல் அநுபவிக்கப் பெற்றிலரன்றே. இவ்வாழ்வாருடைய அநுபவத்தைச் சிறிது எடுத்துரைத்து மகிழ்வோமிங்கு. நானூற்று நாற்பது பாசுரங்கள்கொண்ட பெரியாழ்வார் திருமொழியில் இருநூற்றறுபது பாசுரங்கள் கண்ணபிரானுடைய சிறுச் சேவகங்களையே அநுபவிப்பன. இவ்வநுபவம் பெரும்பாலும் யசோதையின் பாவனையினால் நிகழ்ந்துள்ளது.

பதிகம் 1. **வண்ணமாடங்கள்.** கண்ணபிரான் திருவவதாரம் செய்தது வடமதுரையிலானாலும், அவதாரத்தைப்பற்றின உபலாளனமொன்றும் அங்குச் செய்ய முடியாமல் திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையிலேயே செய்ய முடிந்தது. அந்த ஸம்பிரமங்களையெல்லாம் இப்பதிகம் விரிவாகக் கூறுவது. இதில் முதற்பாசுரத்திலும் முடிவுபாசுரத்திலும் 'திருக்கோட்டியூர்' ப்ரஸ்தாவிக்கப்பட்டுளது. திருக்கோட்டியூ ரெம்பெருமானே கண்ணனாகத் திருவவதரித்ததாய்ப் பேசப்படுகிறது. இங்ஙனே ஆழ்வார் அருளிச்செய்வதற்குக் காரணம் அந்த திவ்யதேசத்தில் விசேஷித்துத் தமக்குள்ள அபிமானமேயாம். அதற்கு அடி ஏதென்னில், தம்மை யாதரித்த பாண்டியதேவனைத் திருத்திப் பணிகொண்ட செல்வநம்பி யென்பவர் திருக்கோட்டியூரைச் சேர்ந்தவர். அவரிடம் பெரியாழ்வார்க்கு உள்ள ஆதரம் அவருகந்த திருப்பதியிலும் பெருகிற்று. ஆழ்வார் இப்படி யநுபவித்தது பற்றியே நாளைக்கும் திருக்கோட்டியூர் ஸன்னிதியில்ஸ்ரீக்ருஷ்ண ஜயந்தியன்று அவதாரக்கொண்டாட்டம் விலக்ஷணமாக அநுஷ்டிக்கப்படுகின்றது. இப்பதிகத்தில் ஒன்பதாவது பாசுரந்தவிர மற்ற பாசுரங்கள் ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச் செய்தவை. 'கிடக்கில் தொட்டில்' என்கிற ஒன்பதாவது பாசுரம் மாத்திரம் ஆழ்வார் யசோதை தன்மையை யெய்திக் கூறியது. மேற்பதிகங்கள் பலவும் யசோதையின் பாசுரமாகக் கூறப்படுகின்றன வெனினும் ஒவ்வொரு பதிகத்திலும் முடிவு பாசுரத்தில் 'எசோதை முற்காலத்தில் கூறியதைப் பிற்காலத்தில் தாம்கூறிய' தாக வெளியிட்டுப் போருகிறார். இப்பதிகத்தில் அங்ஙனமில்லை; விட்டுசித்தன் விரித்த பாடலென்றே தலைக்கட்டியுள்ளார். ஆழ்வார் யசோதையாகவே உருக்கொண்டாரென்பது ஒன்பதாம் பாட்டினால் விளங்கும். "பெரியாழ்வார் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினார்" என்று ஸ்ரீவசனபூஷணத்திலருளிச் செய்ததும் காண்க.

2. **சீதக்கடல்.** திருவாய்ப்பாடிக்கு வந்து சேர்ந்த கண்ணபிரானது பாதாதி கேசாந்தமான வடிவழகை யசோதை தன்னோடொத்த மாதர்களை யழைத்துக் காட்டினபடியைக் கூறுவது. யசோதை தானே கூறுவதாக அமைந்த இப்பதிகத்தில் முதற்பாட்டில் "அசோதைக்குப் போத்தந்த" என்றுள்ளது. "எனக்குப் போத்தந்த" என வேண்டியிருக்க 'அசோதைக்கு' என்றது யசோதையாகிய எனக்கு என்றபடி. மேல் 12. 'மைத்தடங்கண்ணியசோதை' 13. 'வண்டமர் பூங்குழலாச்சி மகனைக் கொண்டு வளர்க்கின்ற' என்றதும் இப்படியே. யசோதையின் சொல்லாக அருளிச் செய்தாலும் இடையில் ஆழ்வார் தமது தன்மையுந் தோன்ற அருளிச் செய்பவர் என்பதுமுண்டு. இதில் "பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலங்கள்" என்றது மிகவும் ரஸிக்கத்தக்கது. வேதத்தில் "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்று ஓதப்பட்டுள்ளது. எம்பெருமானுடைய சிறந்த திருவடியில் தேன் வெள்ளமுண்டு என்றது. இதை யடியொற்றி ஆழ்வார்களும் "தேனே மலருந் திருப்பாதம்" என்கிறார்கள். பாகவதர்கட்குப் பரம போக்கியமான இந்தத் தேன் எம்பெருமான் தனக்கும் போக்யமாகுமன்றோ. நம்மடியார்களுக்கு போக்கியமானது நமக்கும் போக்யமாக வேண்டாவோ வென்று அந்தத் தேனைத் தானே சுவைத்துண்கிறானும். திருவயிற்றில் கிடக்கும் உலகங்கட்கெல்லாம் உஜ்ஜீவனமுண்டாவதற்காகவும் சுவைத்துண்பன். இப்பதிகத்தில் மாதர்களை விளித்துத் தன் மகன் வடிவழகை யசோதை காட்டுவதானது—கண்ணன் தன்னிடம் வந்து சேர்ந்த பத்துநாளுங் கடந்த விரண்டா நாளில். அப்போது கண்ணன் வெண்ணெய்க் களவு, பேய்ச்சிபாலுண்டது,

மருத மரங்களை முறித்தது முதலிய ஒரு செயலையும் செய்ததில்லை; அப்படியிருக்க "பழந்தாம்பாலார்த்த உதரமிருந்தவா காணீரே" என்றும், "பேய்ச்சி முலை சுவைத்துண்டிட்டு" என்றும் "பெருமாவுரலில் பிணிப்புண்டிருந்து அங்கிருமாமருதமிறுத்தவிப்பிள்ளை" என்றும் "தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்" என்றும் "மழ கன்றினங்கள் மறித்துத் திரிவான்" என்றும் இப்பதிகத்தில் கூறியிருப்பது எங்ஙனே பொருந்தும்? "மறங்கொளிரணியன் மார்வைமுன் கீண்டான்" என்று முன்னடந்த அவதாரத்துச் செயலைச் சொல்லியிருப்பது பொருந்துமேயல்லது இவ்வவதாரத்தில் இனி நடக்கப்போகிற விருத்தாந்தங்களை இப்போதே சொல்லுவது பொருந்தாதே! என்று ஒரு சங்கை தோன்றக்கூடும். இதற்கு ஸமாதானம்;—யசோதையின் தன்மையையடைந்து பேசுபவர் பெரியாழ்வாரே யாதலாலும், இவர் இவ்வவதாரத்திற்கு மிகவும் பிற்பட்டவராதலாலும் தாமறிந்த சரிதைகளை யிட்டுப்பேசினது பாங்கே.

3. மாணிக்கங்கட்டி. யசோதைப் பிராட்டி வளர் பிள்ளையான கண்ணனைத் தொட்டிலிலே கண்வளர்த்தித் தாலாட்டினபடியைக் கூறுவது. எம்பெருமான் எந்த இடத்தில் எந்தத் திருமேனியோடு அவதரித்தாலும் அவனுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் முதலிய செய்கைகளைக் கண்டால் பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்கட்கும் தங்களாலியன்றவளவு கைங்கரியம் செய்யாமல் நிற்க முடியாதாகையாலே அத்தேவர்கள் அவ்வாறே சில கிஞ்சித்காரங்கள் கண்ணபிரானுக்குச் செய்ததாக எசோதை எண்ணமிட்டு ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு தேவதையின் கிஞ்சித்காரத்தைச் சொல்லிச் சீராட்டித் தாலாட்டினதாக இப்பதிகம் அமைந்துளது. பிரமன் தொட்டிலையும், சிவன் மாதளம்பூக் கோவை யென்கிற அரைவடம் முதலியவற்றையும், இந்திரன் அரைச் சதங்கையையும், தேவர்கள் பலர் கூடிப் பல திருவாபரணங்களையும், வருணன் முத்துப் பவழ ஹாரங்களையும் வளைகளையும், பெரிய பிராட்டியார் திருத்துழாய் மாலை முதலியவற்றையும், பூமிப்பிராட்டியார் சில ஆடையாபரணங்களையும், துர்க்கா தேவி (அல்லது ஸரஸ்வதி) வாசனைப்பொடி முதலியவற்றையும் கண்ணனுக்கு விடுத்ததாகப் பேசியுள்ளது.

4. தன் முகத்துச் சுட்டி. கண்ணபிரானுக்குத் தொட்டில் பருவம் போய்த் தவழ்ந்து விளையாடத்தக்க பருவமானபின்பு அவன் நீணிலா முற்றத்தே போந்து தவழ்ந்து புழுதியளைவது, சந்திரனை யழைப்பதானபடியை யசோதை யநுபவித்தபடியே கூறினது இது. சந்திரனைக் கண்ணன் அழைத்தமை, யசோதை அழைத்தமை இரண்டுமுண்டு. இதில் 7, 8ஆம் பாசுரங்களில் கண்ணனது பரத்வம் ப்ரகாசமாகக் கூறப்பட்டிருப்பது காண்க. "பாலகனென்று பரிபவஞ் செய்யேல், பண்டொருநாள் ஆலினிலை வளர்ந்த சிறுக்கனவனிவன்" "சிறியனென்று என்னிளஞ் சிங்கத்தை யிகழேல் கண்டாய், சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்று கேள்" என்று.

5. உய்யவுலகு. இளமைப் பருவத்து விளையாடல்களில் செங்கீரையாடுவது என்பது ஒன்று. அதாவது, தாய்மார் முதலானோர் குழந்தைகளைத் தாமே ஆட்டுவிப்பதொருகூத்து. பிள்ளை தனது இரண்டு கைகளையும் முழந்தாளையுமூன்றித் தலையை நிமிர்த்துக்கொண்டு ஆடுதல் என்பாருமுண்டு. இவ்விளையாட்டைக் காணவேணுமென்று விரும்பிய யசோதை 'எனக்கொரு காலாடுக செங்கீரை ஆடுக ஆடுக' என்று பிரார்த்தித்தபடியைக் கூறுவது இப்பதிகம். செங்கீரையாடும்போது திருமார்பிலுறையும் பிராட்டிக்கு அசைதல் உண்டாகாதபடி ஸாவதானமாய் ஆடவேணுமென்று முதற்பாட்டில் [செய்யவள் நின்

னகலஞ் சேமமெனக்கருதியென்று] கூறியது மிக அழகியது. இதில் ஏழாம் பாட்டில்—வைதிகன் பிள்ளைகளைக் கொணர்ந்து கொடுத்த அதிமாநுஷ சேஷ்டிதம் அநுஸந்திக்கப்பட்டிருப்பது குறிக்கொள்க. திருவாபரணங்களையெல்லாம் சேர்த்துப் பேசியிருக்கின்ற *செங்கமலக் கழலில்* என்ற பத்தாம் பாசுரம் நெஞ்சிலூறத் தக்கது.

6. **மாணிக்கக்கிண்கிணியார்ப்ப.** கண்ணபிரான் சப்பாணி கொட்ட வேணுமென்று யசோதை விரும்பிக் கூறுவது இது. 'ஸஹ பாணி' என்ற இரண்டு வடசொற்கள் சேர்ந்து சப்பாணி யென விகாரப் பட்டதென்க. ஒரு கையோடு கூட மற்றொரு கையைச் சேர்த்துக் கொட்டுதலாகிய விளையாட்டு விளையாட வேணுமென்று பிரார்த்திக்கிறபடி. இங்ஙனே கண்ணன் விளையாடும்போது அதைக் கண்டு உவந்து கூறுவதாகவுமாம். இப்படியே மேன்மேலும் சப்பாணி கொட்டாயென்கை.

7. **தொடர் சங்கிலிகை.** சிறு குழந்தைகள் தளர்நடை நடப்பதென்று ஒரு விளையாட்டுண்டு. அதாவது தரையில் பாதங்களை நன்கு பதியவைத்து நடக்கும் பருவமன்றாகையாலே தட்டுத் தடுமாறி நடக்கும் நடை. அந்த நடையைக் கண்ணபிரான் நடக்குமாறு யசோதை வேண்டிக் கொண்டமை கூறுவது இது. (10) பெருநீர்த்திரை யெழுகங்கையிலும் பெரியதோர் தீர்த்த பலந்தருநீர்ச் சிறுச் சண்ணம் துள்ளஞ் சோரத் தளர்நடை நடவானோ—குறியில் நின்றும் மூத்திரநீர் துளிதுளியாகச் சிந்த நடக்கவேணுமென்கிறது. அந்த மூத்திரநீர் கங்கை நீரைவிட மிகச் சிறந்ததென்று பாராட்டிக் கூறப்பட்டுள்ளது. இது விலக்ஷணமான அநுபவம்.

8. **பொன்னியற் கிண்கிணி.** குழந்தைகள் தாய்மாரிடுப்பில் ஏறுவதற்காகக் குதுகலத்தோடே ஓடிவந்து தழுவி யணைத்துக்கொள்வ தென்பது ஒரு விளையாட்டு. அதை விரும்பிப் பேசுகிறது இப்பதிகம். இதில் பாசுரந்தோறும் '**அச்சோவச்சோ**' என வருகிறது. அச்சோ என்பது—குழந்தையை நோக்கி 'அணைத்துக் கொள்' என்று வேண்டுதற்கு ஏற்ற குறிப்புச் சொல்லாக முற்காலத்தில் இருந்தது போலும். இனி, அச்சோ என்பது, அதிசயத்தைக் குறிப்பதோ ரிடைச்சொல்லெனக் கொண்டு, கண்ணன் தன்னை யணைத்துக்கொள்ளும்போது தோன்றும் பரமானந்தத்தில் மூழ்கி நெஞ்சுருகிச் சொல்லிடிந்து வாய் விட்டுச் சொல்லமாட்டாமல் அவ்வாச்சரியத்தை ஒருதரத்துக்கிருதரம் 'அச்சோவச்சோ' என்கிறாளென்னவுமாம். எனவே இது இங்கு 'அணைத்துக் கொள்' என்ற பொருளை ஸந்தர்ப்பத்தால் குறிப்பிக்கின்றதென்க. ஓட்டரா—ஓடிவந்து என்றபடி.

9. **வட்டு நடுவே வளர்கின்ற.** குழந்தைகள் ஓடிவந்து தாய் முதுகில் கட்டிக்கொண்டு ஊசலாடுவதென்று ஒன்றுண்டு, அதைச் செய்யுமாறு கண்ணனை யசோதை வேண்டுவதாகக் கூறுவது இது. பாசுரந்தோறும் 'புறம்புல்குவான்' என முடியும். முதுகிலே அணைத்துக் கொண்டபடியைச் சொல்லிற்றாகவுமாம்; அணைத்துக்கொள்ளவேணுமென்று விரும்பினபடியைச் சொன்னதாகவுமாம்.

10. **மெச்சூது சங்கம்.** சிறு பிள்ளைகள் பூச்சி காட்டி விளையாடுவதுபோலக் கண்ணபிரான் தானும் மாநுஷபாவனைக்கேற்பப் பூச்சிகாட்டி விளையாடியதைக் கூறுவது இது. இப்பதிகம் கோபிமாருடைய பாசுரமாகச் செல்லுகின்றதென்பது (பா. 4.) "புரட்டியந்நாளெங்கள் பூம்பட்டுக் கொண்ட அரட்டன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான்" என்றதனால் விளங்கும். பூச்சி காட்டுவதையே

அப்பூச்சி காட்டுவதாகச் சொல்லுகிறது. கண்ணை இறுத்துவது மயிரால முகத்தை மறைத்துக் காட்டுவது முதலாகச் செய்யும் பயங்கரமான பால சேஷ்டைகள் பூச்சி காட்டுவதாம். அம்மனே! என்பது அச்சத்தினுல் சொல்லும் சொல். ஈற்றடியைக் குறித்து ஓர் ஐதிஹ்யம்;—நம்பெருமாள் ஸன்னிதியில் பகற்பத்துத் திருநாளில் உய்ந்த பிள்ளையென்கிற அரையர் இப்பாட்டை அபிநயிக்கும்போது கோஷ்டியில் உடையவர் எழுந்தருளியிருக்கிறுர், அவர் பின்னே கோவிந்தபட்டரென்கிற எம்பார் எழுந்தருளியிருக்கிறுர். 'அபிநயிக்கின்ற அரையர் "அத்தூதன்" என்னும்போது ஸ்ரீ க்ருஷ்ணனையும், 'அப்பூச்சி' என்னும்போது கண்ணிமையை மடக்கிக்கொண்டு வருவதையும் அபிநயித்துக் காட்ட, இதைக்கண்ட எம்பார் இங்ஙனே அபிநயிப்பது சுவைக்கேடென்று கொண்டு அரையர்க்குத் தெளிவு பிறக்குமாறு தம் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக் காட்டினுர். அதாவது, கண்ணன் அவதார காலத்தில் மறைத்துக்கொண்ட சங்கு சக்கரங்களை ஆய்ப்பெண்களுக்குக் காட்டி அச்சமுறுத்தினபடிதான் இங்கு அப்பூச்சி காட்டினதாகச் சொல்லப்படுகிறபடியால் அங்ஙனம் அபிநயித்துக் காட்டவேணுமென்பது எம்பாருடைய திருவுள்ளம். இதைத் தெரிந்துகொண்ட அரையர்தாம் முன் அபிநயித்த படியை விட்டு [எம்பார் காட்டியது போலவே] எம்பெருமான் திருத்தோள்களில் சங்கு சக்கரம் தரித்துக்கொண்டிருப்பதை அபிநயிக்க, அதைக் கடாக்ஷித்தருளின உடையவர் மிகவுகந்து முதலில் வேறுவிதமாக அபிநயித்துக்காட்டின அரையர் இப்போது இங்ஙனம் அபிநயித்துக் காட்டியது எம்பாருடைய உத்போதனத்தினுலேயே ஆயிருக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றிப் பின்னே திரும்பி எம்பாரைக் குளிரக் கடாக்ஷித்தருளினராம். இதனுல் ஏற்படுவதாவது—தூதனைத் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டு 'நம்மிலே ஒருவன்' என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி யிருப்பவன் சில காலங்களில் அவர்கள் அஞ்சும்படி ஈச்வரத்வ சின்னங்களையும் காட்டுகிறுனென்பது.

*11.* **அரவணையாய்.** கண்ணபிரான் பகல் முழுதும் விளையாடி யிளைத்துப் பொழுதுபோனதையும் முலையுண்பதையும் மறந்து உறங்கிப்போய், பொழுது விடிந்து நெடும்போதாகியும் கண்விழியாதிருக்கவே யசோதை அப்பிரானைத் துயிலெழுப்பி முலையுண்ணுமல் இப்படி உறங்குகின்றனையே யென்று நிர்ப்பந்தித்து முலையூட்டினபடியைப் பேசுவது இது. இதில் ஆருவது பாட்டு ***மின்னனைய நுண்ணிடையார்.** ஸ்ரீவில்லிபுத்தூர்க்குப் பெரியாழ்வாருடைய மங்களாசாஸனப் பாசுரம் இஃது ஒன்றே. இதில் "மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்தவண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்" என்றது சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகிய தம் திருமகளாருடைய சரிதையை நன்கு காட்டினபடி. மின்னனைய நுண்ணிடையாரென்றது ஆண்டாளையேயாகும். அவள் சூடிக்களைந்த பூமாலையிலே எம்பெருமான் மிகவும் குதுகலமுடையனுயிருந்ததனுல் அப்பெருமானை **வண்டு** என்றுர். "தூவியம் புள்ளுடைத் தெய்வ வண்டு" என்றுர் நம்மாழ்வாரும். 'குழல் மேல் நுழைந்த' என்றது....குழலிலணிந்த பூவின்மீது அபிநிவேசங் கொண்ட என்றபடி.

*12.* **போய்ப்பாடுடைய.** யசோதை கண்ணனுக்குக் காது குத்திக் காது பெருக்கிக் காதணிகளுமிட்டு அநுபவிக்க ஆசைப்பட்டுக் காது குத்துகையாகிற அவ்வுத்ஸவத்துக்கு ஊரில் பெண்களை யெல்லாமழைத்துவிட்டு, வந்தவர்களை ஸத்கரிப்பதற்கான அடைக்காய் முதலியவைகளையும் ஸம்பாதித்து வைத்து அவனைக் காதுகுத்த வாவென்றழைக்க, அவன் காது நோகுமென்றஞ்சி வர மாட்டேனென்னச் செய்தேயும் அவன் அஞ்சாமைக்கு உறுப்பான வார்த்தை

களைச் சொல்லியும் அவனுக்கு விருப்பமான வஸ்துக்களைக் காட்டியும் உடன் படுத்திக்கொண்டு காது பெருக்கினபடியைப் பேசுவது இப்பதிகம். அந்தாதித் தொடையிலமைந்தது இது ரத்நாவலியலங்காரத்தின்பாற் படும்படி கேசவாதி த்வாதச நாமங்களைப் பாசுரங்களின் முறையே அமைத்திருப்பது காண்க. 8, 9, 12 பாசுரங்கள் கண்ணனுக்கும் யசோதைக்கும் ஸம்வாதமாக அமைந்தவை.

13. வெண்ணெயளைந்த. யசோதை கண்ணனுக்குக் காதுகுத்தித் திரியிட்டுக் காதைப் பெருக்கிக் கடிப்பிட்டபின்பு அனுக்கம் நீங்க அவனை நீராட்டவேணுமென்றுசைப்பட்டு அதற்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் ஸித்தப்படுத்தி அப்பிரானைப் பலபடியாக நல்வார்த்தை சொல்லிப் புகழ்ந்தழைத்து மஞ்சனமாட்டினபடியைக் கூறுவது இது. (பா. 9. பூணிந் தொழுவினில்.) இது நெஞ்சைக் கவரும் பாசுரம். கண்ணா! நீ ஜாதிக்குத் தக்கவாறு மாட்டுத் தொழுவிற் புகுந்து புழுதியளைந்து அழுக்குடம்புடனே யிருந்தாலும் உனது மேனி பொன்னுக்குப் புழுதியேறினாற்போலக் குழந்தைப் பருவத்தினால் விளங்குதலால் அதைக்காண்பது எனக்கு மிகவும் விருப்பமே; எனினும் 'இவள் பிள்ளை வளர்ப்பது அழகாயிருக்கிறது!' என்று கண்டவர்களெல்லாரும் என்னைச் சிரிப்பர்களே; தவிரவும் நப்பின்னையும் உன்னைப் பரிஹாஸம் பண்ணுவளே; ஆகையால் இப்போது இருப்பதுபோல நீ வெட்கமற்று நில்லாமல் உடனே நீராட வரவேணுமென்று யசோதை அழைக்கிறபடி.

14. பின்னைமணாளனை. யசோதை கண்ணனை மஞ்சனமாட்டின பின்பு குழல்வாரக் கருதி அவன் அழுது ஓடுதல் ஆடுதல் செய்யாமல் செவ்வனே யிருந்து குழல்வாரத் தலையைக் காட்டுதற்காக, உலகத்தார் குழந்தைகளைக் குழல் வாரும்போது வசப்படுத்துவதற்குச் சொல்லுவதுபோல் 'அக்காக்காய் குழல்வாரவா' என்று சொல்லிக் கண்ணனைச் சீராட்டிக்கொண்டு ஸ்வாதீனப் படுத்தினபடியைக் கூறுவது இது. காக்கைவந்து கத்தும்போது குழந்தைகள் பராக்காயிருக்குமாதலால் அப்போது தலைவாருதல் சுகமாக முடியுமென்பது பற்றி அக்காரியத்தைக் காக்காயின் மேலேற்றிக் 'குழல்வாராய் அக்காக்காய்' என்றாளென்க. அக்காக்காய்! என்று காக்கையை விளித்துக் குழந்தைகளுக்குக் குழல்வாரி முடித்தல் உலக வழக்கத்திலுமுள்ளதே.

15. வேலிக்கோல் வெட்டி. யசோதை கண்ணனைக் குழல்வாரினபின்பு பூச்சூட்ட நினைத்திருக்கையில் கண்ணன் தன் சாதிநடைக்கேற்பக் கன்றுமேய்க்கிற பிள்ளைகளோடே தானும் போகநினைத்துக் 'கன்று மேய்க்கிற கோலைக் கொடு' என்று தாயை நிர்ப்பந்தித்துக் கேட்க, அவளும் இவனைப் பூச்சூடிக் காணவேணுமென்கிற அவாவினாலே, கேட்டபடி கோல் கொடாமல் அவனை வஞ்சித்துச் சொல்லியதைக் கூறுவது இது; இப்பதிகமும் காக்கையைக் குறித்தே சொல்லுவது. அது "பொற்றிகழ் சித்திரகூடப் பொருப்பினில்" என்ற ஏழாம் பாட்டாலும் ஈற்றுப் பாசுரத்தினாலும் நன்கு விளங்கும். கண்ணா! உன் கோலைக் காக்கை கொண்டுபோய் விட்டது; இதோ வரவழைத்துத் தருகிறேன்; அதையே கூப்பிட்டுக் கொண்டுவரச் சொல்லுகிறேன் பார் என்று வியாஜோக்தி கூறி வஞ்சிக்கிறபடி.

16. ஆநிரை மேய்க்க. 'கன்று மேய்க்கப் போகவேணும், கோலைக் கொடு' என்றழுத கண்ணனை யசோதை; 'அக்காக்காய் நம்பிக்குக் கோல் கொண்டுவா' என்று சொல்லி ஒருவாறு வஞ்சித்து அவனழுகையை நிறுத்தின பின்பு, தான் நினைத்தபடியே பூச்சூட்ட விரும்பி 'நான் பல புஷ்பங்களையும் வைத்திருக்

கிறேன், அவை செவ்வி யழிவதற்கு முன்னே நீ அவற்றைச் சூடவரவேணும்' என்று அக்கண்ணபிரானை யழைத்தமையைக் கூறுவது இது. இதில் [பா. 8.] *சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டாய்* என்று அபூர்வமான வொரு இதிஹாஸ மருளிச் செய்துள்ளார். இது வேறு எந்த ஆழ்வாராலு மருளிச் செய்யப்படவில்லை. இதிஹாஸ புராணங்களிலும் ஒன்றிலும் காணக் கிடைத்திலது. மாலிகனென்பா னொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த் தோழனாயிருந்தான். அவன் இப்பிரான் பக்கலில் பலவகையாயுதங்களையும் பயின்று ஒருவர்க்கு மஞ்சாமல் அஹங்காரியாய் ஸாது ஜனங்களை ஹிம்ஸித்துக்கொண்டிருந்தான். நன்மையாக எவ்வளவு சொல்லியும் அவன் கேளாமையாலே இனியிவனை முடிப்பதே நலமென்று திருவுள்ளம் பற்றிய கண்ணபிரான் 'சக்கராயுதப் பயிற்சியையும் எனக்கு நீ செய்விக்கவேணும்' என்று அவன் தானே தன்னை வேண்டும்படியாகச் செய்து அப்படியே அதனைப் பயில்விக்கிற வியாஜமாக அந்த சக்கரத்தைக்கொண்டே அவனது தலையை அரிந்திட்டான் [நான்முகனது வரத்தினால் வால்மீகிமுனிவர் பகவதவதார விருத்தாந்தங்களைத் தாமாக ஸாக்ஷாத்கரித்ததுபோல இவ்வாழ்வாரும் மயர்வறமதிநலம் அருளப்பெற்றுத் தாமாக ஸாக்ஷாத்கரித்தவற்றில் இவ்வரலாறு ஒன்று என்பர் பெரியோர். இப்பிரபந்தத்திலேயே 5-4-6 *உன்னுடைய விக்கிரம மொன்றொழியாமலெல்லா மென்ற பாசுரத்தின் பூருவ வியாக்கியானத்தில் இது ஸ்பஷ்டமாகக் காணத்தக்கது.]

17. **இந்திரனோடு பிரமன்.** யசோதை கண்ணனை நீராட்டிக் குழல்வாரிப் பூச்சூட்டின பின்பு அவனுக்கு த்ருஷ்டி தோஷம் வாராதபடி [—கண்ணெச்சில் படாதபடி] காப்பிடவேணுமென்று கருதி 'கண்ணா! நீ போது போன வேளையில் நாற்சந்தி முதலிய விடங்களில் நில்லாதே' என்றழைத்துக் காப்பிட்ட படியைக் கூறுவது இது. திருவெள்ளறை யென்னுந் திருப்பதியிலே கண்ணன் அர்ச்சையாக நிற்கிற நிலையிலே இவ்வநுபவம் ஆழ்வார்க்குச் செல்லுகின்றது.

18. **வெண்ணெய் விழுங்கி.** யசோதை கண்ணனை நீராட்டிக் குழல்வாரிப் பூச்சூட்டிக் காப்பிட்டுத் தன் பக்கத்தில் படுக்கவைத்துத் தானுமுறங்கிப் பின்பு விடிய எழுந்திருந்து வீட்டு வேலைகளைப் பார்க்கப்போக, கண்ணபிரான் தானுமெழுந்திருந்து ஊரார் வீட்டிலே புகுந்து வெண்ணெயை விழுங்குவதும் பாத்திரத்தை யுடைப்பதும் பக்ஷ்யங்களைக் கொள்ளை கொண்டு உண்பதும் காய்ச்சின பாலைச் சாய்த்துப் பருகுவதும் சிறு பெண்களின் கை வளைகளைக் கழற்றி நாவற்பழம் வாங்குவதுமாகத் தீம்புகளைச் செய்ய, அந்தந்த வீட்டிலுள்ளார் வந்து யசோதையிடத்தில் கண்ணனுடைய அச்செயல்களைப் பற்றி முறையிடுவதையும் அவ்வப்போது யசோதைப் பிராட்டி கண்ணனைப் பலவாறாகச் சொல்லி யழைப்பதையும் பேசுவது இது. இதில் 1, 3, 5, 7, 9, 10 ஆம் பாட்டுக்கள் முறையிடுமாய்ச்சிகளின் பாசுரங்கள். மற்றவை கண்ணனை சிக்ஷிக்கின்ற யசோதையின் பாசுரங்கள். இவ்வநுபவத்தைப் பிறகு தனியே எடுத்துக்கொள்ள ஆசையுளது.

19. **ஆற்றிலிருந்து.** கண்ணபிரானாலே நலிவுபட்ட பல பெண்பிள்ளைகள் யசோதை பக்கலிலே வந்து 'அம்மா! உன் மகன் எம்மை இன்று நலிந்த படிகளை நினைத்தால் எங்களுக்குப் பிழைத்திருக்க விரகில்லை; இவனால் நாங்கள் முடியாநின்றோம்' என்று அவனது சேஷ்டைகளைச் சொல்லி முறையிட்டு வருந்தின படியைக்கூறுவது. முந்தினபதிகம் ஊர்ப்பூசல்; இப்பதிகம் ஆற்றங்கரைப்பூசல்.

20. தன்னேராயிரம் பிள்ளைகளோடு. இதுவரையில் ஸமயங்களில் கண்ணனை முலையுண்ணவாவென்றழைத்தும் மூலையூட்டியும் வந்த யசோதை "உன்னை யறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மந்தரவே"—கண்ணா! உன்னை நான் ஸாக்ஷாத் ஸர்வேச்வரனென்று அறிந்துகொண்டேன்! உன்னுடைய சரிதைகள் சாமான்யமாக இல்லையே; உனக்கு நான் முலை கொடுக்கத் தகுமோ? இது வரையில் கொடுத்தேனாகிலும் இனி கொடுக்கப்பயப்படுகிறேன் என்று சொன்னபடியைக் கூறுவது இது. பேய்ச்சி முலையை யுண்டு அவளை மாய்த்தது சகடாசுர பங்கம் செய்தது, இரட்டை மருதமரங்களை முறித்தது முதலிய சிறுச் சேவகங்களைப் பேசித் தன்னுடைய அச்சத்தை மூதலிக்கிறாள்.

21. அஞ்சனவண்ணனை. கீழே கண்ணபிரான் பக்கல் புத்ரத்வ புத்தியைத் தான் தவிர்த்துக்கொண்டமையை வெளியிட்ட யசோதை அதனை மறந்துவிட்டுக் கண்ணனைத் தன் மகனாகவே கொண்டு சாதிக்குத் தக்கவாறாக அவனைக் காலையிலே கன்றுமேய்க்கக் காடேற அனுப்பிவிட்டுப் பின்பு அவனது பிரிவைத் தான் பொறுக்க மாட்டாமல் நொந்து, அவன் ஊரில் தீமை செய்து திரியும் படிகளைச் சொல்லி 'ஐயோ! என் பிள்ளை இங்கே இப்படி பல தீம்புகளைச் செய்துகொண்டு இருக்கவொட்டாமல் கல்லும் முள்ளுமான கடுங்காட்டில் போகவிட்டேனே பாவியேன்!' என்று கழறினவாற்றைக் கூறுவது இது.

22. சீலைக் குதம்பை யொருகாது. கண்ணனைக் காட்டில் போகவிட்ட கொடுமையைக் கூறி வயிறெரிந்துகொண்டே பகற்போதையெல்லாம் ஒருவாறு போக்கின யசோதை, கன்றுகளை மேய்த்துவிட்டு மாலைப்பொழுதிலே மீண்டு வருகின்ற கண்ணபிரானை எதிர்கொண்டு சென்று அவனது திருமேனியின் அலங்காரம் முதலியவற்றைத் தான் கண்டு மகிழ்ந்து, பிறரையும் காணச் செய்து தான் பெற்றுள்ள பெருமையையும், அவனைக் கன்று மேய்க்கப் போக விட்ட தான் செய்த காரியத்தின் புன்மையையும் சொல்லி வருந்தி 'கண்ணா! இனி நீ கன்றுகளின் பின்னே காடு நோக்கிச் செல்லவேண்டா' என்றதைக் கூறுவது இது. இதில் முதற்பாட்டில் "ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானே மற்றாருமில்லை" என்ற யசோதையின் மகிழ்ச்சிப் பேச்சு குறிக்கொள்ளத்தக்கது. கீழ் (2-2-6). *என்ன நோன்பு நோற்றாள் கோலோ இவனைப்பெற்ற வயிறுடையாள் என்னும் வார்த்தை யெய்துவித்த இருடீகேசா!* என்றதனால் பிறருடைய வாயினால் யசோதை தனக்குக் கிடைத்த கொண்டாட்டம் கூறப்பட்டது, இங்கு இப்பாட்டினால் தன் வாயினாலும் தனது கொண்டாட்டம் கூறப்பட்டது; இரண்டும் வேண்டியதே.

23. தழைகளுந் தொங்கலும். கீழ்ப் பதிகத்தில் "திண்ணார் வெண்சங் குடையாய் திருநாள் திருவோணமின்றேழுநாள்....கண்ணா நீ நாளைத் தொட்டுக் கன்றின் பின் போகேல் கோலஞ்செய்திங்கே யிரு" என்று தாய் நியமித்த படியே கண்ணபிரானிருந்து அவ்வேழுநாளும் கடந்தவாறே பண்டுபோலக் காட்டுக்குப் போய் அங்குப் பசுக்களை மேய்த்த மகிழ்ச்சியாலே தன்னை வகை வகையாக அலங்கரித்துக் குழலூதுவது இசைபாடுவதாய்க்கொண்டு தன் தோழன்மாருடன் பெரிய கோஷ்டியாகத் திருவாய்ப்பாடியேற மீண்டுவருங் கோலத்தைக் கண்ட இடைப்பெண்கள் அக்கண்ணபிரான் திறத்தில் விருப்பம் அதிகரிக்கப் பெற்ற படியைக் கூறுவது இது. இதில் முதற்பாட்டு ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச் செய்தது. மற்றவை ஆய்ச்சிமார் தன்மையில். கண்ணபிரான் கன்றுகளை மேய்த்துவிட்டுத் தன்னோடொத்த நிறத்தனரான ஆயிரந் தோழன்மாருடன் கூடிப் பற்பல பீலிக் குடைகள் விசிறிகள் வாத்தி

யங்கள் முதலிய ஸம்ப்ரமத்துடன் வருகின்றவாற்றைக் கண்ட யுவதிகள் 'இவை மேகங்கள் திரண்டுருண்டு வருகின்றனவோ!' என்று தம்மிலே தாம் சொல்லிக் கொண்டு இவனை இடைவிடாது காண்கைக்காகத் தம் தம் மாளிகைகளில் கவாக்ஷ த்வாரத் தளவிலே நின்று காணலுற்று, கண்ணனுடைய அழகின் மிகுதியைக் காணக்காணப் பரவசைகளாய் நின்றவிடத்தில் நிற்கமாட்டாமல் சிலர் அபிநிவேசாதிசயத்தால் கண்கலங்கி கவாக்ஷ வழியாக வெளிப் புறப்பட முயல்வாரும் சிலர் மாமியார் முதலியோருக்கஞ்சி அவ்விடத்திலேயே திகைத்து நிற்பாருமாய் இங்ஙனே தம் தம் நெஞ்சுகளை யிழந்து ஆஹார விருப்பத்தையும் மறக்கப்பெற்றூர்களென்கிறது முதற் பாசுரம். 2. (வல்லி நுண்ணிதழ்) தோழிமார் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளும் பாசுரமாக இது அமைக்கப்பட்டது. தோழிகாள்! இவ்வூரில் ஒரு பிள்ளையுளன் என்பது உங்களுக்குத் தெரியுமே; அவன் நல்ல நல்ல ஆடையைச் சாத்திக்கொண்டு கச்சுங் கத்தியுமாகத் தனது தோழன்மாருடன் மஹாஸம்பிரமமாக மாலைப்பொழுதாகிய இப்பொழுதிலே இச்சேரியேற வரப்புகா நின்றான். அவன் வருமழகைக் காண விரும்பி வழியில் அவனை யெதிர்கொண்டு நின்றவர்களில் வளையிழவாதரர் ஒருத்தருமில்லை. நீங்களாகிலும் ஜாகரூகதையுடனிருந்து உங்கள் கை வளைகளை நோக்கிக்கொள்ளுங்கள் என்று ஒருத்தி தன் தோழிகளுக்கு எச்சரிக்கை செய்வதாகவுள்ளது இப்பாசுரம். கைவளைகளை நோக்கிக்கொள்ளுங்கோளென்றது, வளையிழப்பதற்குறுப்பாக உடம்பு மெலிந்து வருந்தும்படியாக (பிரிந்து நோவு படும்படியாக) அவ்வழகிலே யீடுபடவேண்டாவென்றபடி. ஈடுபட்டாரை இங்ஙனமே வருத்தும்படியான வடிவழகு படைத்தவன் கண்ணபிரான் என்றவாறு. 3. (சுரிகையுந் தெறிவில்லும்.) ஒரு பெண்பிள்ளையின் தாய் சொல்லும் பாசுரமாக அமைக்கப்பட்டதிது. கண்ணபிரான் காட்டில் கன்றுகளை மேய்த்துவிட்டு, லீலோபகரணங்களுங் கையுமான தோழன்மாருடன் மீண்டுவரும்போது வழியில் நின்றுகொண்டிருந்த என் மகள் முதலில் அவனைப் பொதுவாகப் பார்த்தாள்; பிறகு 'இவர்களில் இவனொருத்தன் விலக்ஷணனாயிருக்கின்றானே!' என்று சிறிது உற்றுப்பார்த்தாள். உலகில் அபூர்வமானதொரு வஸ்துவைப் பார்ப்பவர்களுக்கெல்லாம் இது இயல்பே. நெஞ்சில் ஒருவகை யாசையைக்கொண்டு பார்த்தாளில்லை; ஆயினும் 'இவள் அவனை உற்றுப்பார்த்தாளாகையாலே இவளுக்கும் அவனுக்கும் ஏதோ தொடர்பு இருக்கிறது' என்று ஊரார் வம்பு கூறுகின்றனர். இது தகுமோ என்று தாய் முறைப்படுவதாகவுள்ளதிப் பாசுரம். 4. (குன்றெடுத்தாநிரை.) கண்ணபிரானெழுந்தருளுந் தெருவில் நின்றுகொண்டிருந்தவொரு பெண்பிள்ளை ஸம்ப்ரம விசேஷத்துடனே வருகின்ற அப்பிரானைக் கண்டு இவ்விலக்ஷண வ்யக்தியை நம் தோழியுங் கண்டுகளிக்க வேணுமெனக் கருதி, வீட்டினுள்ளே கிடப்பாளொரு தோழியை நோக்கித் 'தோழீ! இதுவரை நாம் கண்டவர்களில் ஒருவரையும் ஒப்பாகச் சொல்லப் பெறாத ஒரு விலக்ஷண புருஷன் இங்ஙனமே வருகின்றான், சடக்கென வந்து காணாய்' என்றழைக்க, அதற்கு அவள் 'அவன் யாவன்? எக்குடியிற் பிறந்தவன்?' என்று சில கேள்வி கேட்டுக்கொண்டு வரத் தாமதிக்க 'அடீ! ஒருவன் இவ்விடைச் சேரியில் வந்து பிறந்து பற்பல அதிமாநுஷ சேஷ்டிதங்களைச் செய்துளனென்று கேட்டுள்ளோமே! அக்கண்ணபிரான் காண்' என்று இவள் சொல்ல, இதை அவள் கேட்டு 'அவன் அத்தனை விலக்ஷணனோ?' என்ன, 'பேதாய்! இவன் விலக்ஷணனல்லனாகில் யான் இவ்வாறு விகாரமடைவேனோ? பாராய் தோழீ!, அரையில் துகில் தங்கவில்லை; கையில வளை நிற்கவில்லை; முலைகள் என் கட்டளைக்கு உட்படியவில்லை; இன்னும் என்னாகவேணும்' என்று இவள் கூறுவதாக அமைக்கப்பட்ட பாசுரமிது. 5. (சுற்றி நின்று) தன்னோ

ராயிரம் பிள்ளைகள் தன்னைச் சூழ்ந்துகொண்டு மயில்தோகைக் குடைகளைப் பிடித்துக்கொண்டுவர, தனது சுருண்ட திருக்குழல்களை யெடுத்துக் கட்டிப் பீலிக் கண்களாலே அலங்கரித்துக்கொண்டு இடைப் பிள்ளைகளின் கோஷ்டியில் முன்னணியில் நின்றுகொண்டு பாட்டுங் கூத்துமாக வருகின்ற இப்பெருமானுக் கொழிய வேறொருவனுக்கு நான் வாழ்க்கைப்படமாட்டேன்; ஆகவே, தாய்மார் களே! என்னை அப்பிரானுக்கே தாரைவார்த்துத் தத்தம் பண்ணிவிடுங்கள்; இல்லையேல் உங்களுக்கு என்றைக்கும் மனக்குழப்பமேயாம்படியான காரியம் விளைந்திடுமென்று ஒரு பெண்பிள்ளை கூறும் பாசுரமாக அமைக்கப்பட்டதிது. 6. (சிந்துரமிலங்க.) அலங்கார வகைகளை அழகுபெற அமைத்துக்கொண்டு பீலிக் குடைகளின் நிழலிலே தோழன்மாருடன் தடி வீசுகையென்னும் விளையாட் டைச் செய்து கொண்டுவருகிற இக்கண்ணபிரான் இவ்வீதியின் வழியே வரப் போகிறானே; வரட்டும்; ஒரு கிறி செய்து அவனது பவளவாய் முறுவலைக் கண்டே தீருவோம்; 'நேற்று நாங்கள் தோழிமாருடன் பந்தாடிக்கொண்டிருக் கையில் இவன் சடக்கெனப் புகுந்து அப்பந்தைப் பறித்துக்கொண்டு கள்ளன் போல ஓடிப்போய்விட்டான்; அதை இப்போது தந்தாலொழிய இவனைக் கால் பேரவொட்டோம்' என்று சில ஸாஹஸோக்திகளைச் சொல்வோ மாகில் அவன் திடுக்கிட்டு நிற்பன்; இதென்ன ஸாஹஸம்! என்று வியந்து சிரிக்கவும் சிரிப்பன். இவ்வழியால் அவ்வழகை யெல்லாம் நாம் காணப்பெற லாம் என்று சொல்லி ஒருத்தி தேறி நிற்பதாக அமைக்கப்பட்டதிப்பாசுரம்.

**24. அட்டுக்குவிசோறு.** [இப்பதிகம் பாசுரந்தோறும் 'கோவர்த்தன மென் னுங் கொற்றக் குடையே' என்கிற முடிபு கொண்டது. திருவாய்ப்பாடியில் ஆயர்கள் வழக்கப்படி இந்திர பூஜைக்கென்று சமைத்த சோறு முதலியவற்றை யடங்கலும் கண்ணபிரான் அவ்விந்திரனுக்கு இடவொட்டாமல் கோவர்த்தன மலைக்கு இடுவித்து, பின்பு தானே ஒரு தேவதா ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்துவிட, பிறகு இந்திரன் பசிக் கோபத்தினால் மேகங்களை ஏவி ஏழுநாள் விடாமழை பெய்விக்க, கண்ணபிரான் அக் கோவர்த்தன கிரியைக் குடையாகத் தூக்கிக் கோக்களையும் கோவலரையும் காத்தருளின பேருதவியை ஆழ்வார் பெருமையுற மதித்து அவ்வரலாற்றை விரிவாக அருளிச்செய்வது இத் திருமொழி. வெறும் கதையைச் சொல்லுகிறவளவோடு நில்லாமல் அந்த அபதானத்தில் ஆழ்வார் உருகி யீடுபடுகின்றமை (பா. 10). "கொடி யேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில, வடிவேறு திருவுகிர் நொந்துமில மணிவண்ணன் மலையுமோர் சம்பிரதம்" என்ற பாசுரத்தில் நன்கு அநுபவிக்கத்தக்கது. கண்ணபிரான் ஏழுநாளளவும் ஏகாகாரமாக மலையைத் தாங்கிக்கொண்டு நிற்கச் செய்தேயும் கை, விரல், நகம் முதலியவையொன்றும் சிறிதும் விகாரமடையாமையால் இவன் மலையெடுத்து நின்றவிது தொம்பரவர் கூத்துப்போலே ஒரு கண்கட்டு வித்தையாகத் தோன்றுகிறதேயன்றி ஒன்றும் மெய்க்கொள்ளப் போகவில்லை; மெய்யே மலையைச் சுமந்தானாகில் மேனி வாட்ட முண்டாகாதொழியுமோ வென்று சமத்காரந் தோற்றக் கூறுகின்றார் முன்னடி களில். "மணிவண்ணன் மலையும் ஓர் சம்பிரதம்" என்கிறார். சம்பிரதமாவது இந்திர ஜால வித்தை. ஒருவகை அஞ்ஜனத்தின் உதவியினால் ஒரு முஹூர்த்த காலத்தளவு நிற்கும்படி மாஞ்செடி முளைக்கச் செய்தல் முதலியன காட்டுகின்றார் களே, அதற்குப் பெயர். இப்படி இந்திர ஜாலமெனச் சங்கிக்கும்படி அநாயாஸ மாகச் செய்த காரியமென்றவாறு. இப்பாசுரத்தின் பின்னடிகளில் "மாமுகிற் பல் கணங்கள் எங்குங் குடியேறி யிருந்து மழை பொழியும்" என்றது அக்காலத் தில் கோவர்த்தன மலையைக் குடையாகவெடுத்த காலத்து நிகழ்ச்சியைக் கூறுவ

தன்று; கண்ணபிரான் மழை தடுக்க மலையெடுத்தபோது அதன்மேல் இவ்வாறு மழையுண்டானதாகச் சொல்லுவது பொருந்தாதன்றோ? பிற்காலத்தில் மலையின் ஸந்நிவேசமிருக்கும்படியைக் கூறியவாறு. கீழ்ப்பாசுரங்களின் பின்னடிகளெல்லாம் இவ்வகையானே அமைந்தனவன்றோ.

25. நாவலம் பெரிய. கண்ணபிரான் தன் சாதிக்கு உரியவாறு விருந்தாவனத்திலே நின்று குழலூத, அக்குழலோசையைக்கேட்ட இடைப்பெண்கள் பட்டபாடுகளையும் மேலுலகங்களிலுள்ள தேவமாதர் விகாரமடைந்தவாற்றையும், நாற்கால் விலங்குகளுங்கூடத் திகைத்து நின்ற படியையும், மரம் முதலிய அசேதநங்களும் மகிழ்வுற்ற படியையும் தனித்தனியே பேசி அத்திருக் குழலோசையின் வைசித்திரியை விரிவாக அநுபவித்துப் பேசுந்திருமொழி இது. இப்பெரியாழ்வார் திருமொழிக்குள் இப்பதிகம் ஒப்புயர்வற்றதென்க. இதில் ஒவ்வொரு பாசுரமும் நெஞ்சை நீர்ப்பண்டமாக்கவற்று. இப்பதிகத்தைப் பன்முறையும் இசைத்துப் பாடவல்லார்க்கு, ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் கோபால விம்சதியில் "அதராஹித சாரு வம்ச நாளா: மகுடாலம்பி மயூர பிஞ்சமாலா:, ஹரிநீல சிலாவிபங்கநீலா: ப்ரதிபாஸ் ஸந்து மம" என்று பிரார்த்தித்த பேறு இம்மைப் பிறவியிலேயே கிடைக்கும்; குழலூதிக்கொண்டே கண்ணபிரான் எதிர் நின்று கூத்தாடுவன் என்பது அநுபவரஸிகர்களின் உண்மையுரை. 1. கண்ணபிரான் வேய்ங்குழலை வாயில்வைத்து ஊத, அதனோசையைக் கேட்ட இடைப்பெண்கள் உடலிளைத்து மனமுருகி, தங்களுக்குக் காவலாக வீட்டிலிருக்கின்ற மாமியார் மாமனார் முதலியோரையும் "குரவ: கிம் கரிஷ்யந்தி" என்று அலக்ஷியம் பண்ணிவிட்டுக் கண்ணன் குழலூது மிடத்தேறப் புகுந்து கயிற்றில் ஒழுங்குபடத் தொடுப்புண்ட மலர்கள்போல வரிசையாக நின்று கண்ணனது முகத்தைக் கண்டவாறே 'நாம் நமது காமத்தை இங்ஙனம் வெளிப்படையாக்கினோமே' என்று வெள்கி அவன் முகத்தை முகங்கொண்டு காணமாட்டாமல் தலை கவிழ்ந்து தரையைக் கீறிநின்றனராம். 2. மோவாய்க்கட்டையின் இடது பக்கம் இடத்தோள் பக்கமாகத் திரும்புதலும் இரண்டு கையும் குழலோடு கூடுதலும் புருவம் நெரித்தலும் வயிற்றிலே காற்றை நிறைத்து நிறுத்தி அதனைத் திருப்பவளத்தாலே கிரமமாக விட்டு ஊதவேண்டுகையாலே வயிறு குடம்போல எடுப்பாகத் தோற்றுதலும் குழலின் துளைகளின் அளவுக்கு ஏற்ப வாய் குவிந்து குமிழ்த்துப் போதலுமாகிய இப்படிப்பட்ட ஸந்நிவேசத்துடனே கண்ணன் குழலூத, அதைக்கேட்ட ஆயர் சிறுமிகள் இருந்த விடத்தில் நின்றே உடல் விகாரமடைந்து மயிர் முடி அவிழவும் அரையுடை நெகிழவும் பெற்று இந்நிலைமையோடே நாம் எவ்வாறு வெளிப்புறப்படுவதென்கிற ஸங்கோசமுமற்று நெகிழ்ந்த துகிலை ஒரு கையாலும் அவிழ்ந்த முடியை ஒரு கையாலும் பற்றிக்கொண்டு ஓடிவந்து கண்டு களிக்கப்பெற்றனராம். 4. கண்ணனது குழலினிசையைக் கேட்ட மேனகை முதலிய மேம்பட்ட மாதரும் இனி நாம் ஆடுகையாவதென்? பாடுகையாவதென்?' என்று நாணங்கொண்டு தாமாகவே தமது ஆடல் பாடல்களைத் தவிர்த்தனராம். 5. யாழிசைத் தேர்ச்சியில் முதன்மைபெற்ற தும்புரு நாரதர்கள் கண்ணனது வேணுகானத்தைக் கேட்டபிறகு அதுதன்னி லீடுபட்டுத் தமது வீணைகளை மறந்தொழிந்தனர்; கின்னர மிதுனங்களும் இக்குழலோசையைக் கேட்டுத் தோற்றதாகக் கொண்டு 'இனி நாங்கள் எங்கள் கின்னரம் தொடுவதில்லை; ஆணை.' என்று உறுதி கூறியொழிந்தனராம். 6. பரமபோக்யமான இக்குழலோசையாகிற வலையிலே கந்தருவர்கள் கட்டுப்பட்டு 'இனிப் பாட்டுத் தொழிலில் எமக்கு யாதொரு அந்வயமுமில்லை' என நிச்ச

யித்தொழிந்ததுமன்றி, கீழுள்ள காலமெல்லாம் தாம் பாடித் திரிந்த படியை நினைத்து அதற்காகவும் வெட்கப்பட்டு மேல் ஒன்றும் நினைக்கவொண்ணாதபடி அறிவையுமிழந்து உடலும் மனமும் கட்டழிந்து இவ்வாறான தங்கள் தளர்த்தியை வாயினாற் சொல்லவும் வல்லமையற்று 'இனி நாங்கள் ஒன்றுஞ் செய்ய மாட்டுகிறிலோம்' என்பதைத் தெரிவிக்கிற பாவனையாக ஊமையர் ஸம்ஜ்ஞை காட்டுவதுபோலக் கையை மறித்துக்காட்டி நின்றனராம். 7. கண்ணபிரான் இவ்வுலகில் ஊதின குழலினோசை மேலுலகத்தளவும் பரந்து செல்ல, அங்கு அதனைக்கேட்ட தேவர்களில் ஒருவர் தப்பாமல் தமது உணவுகளையும் மறந்து 'கண்ணன் பிறந்து வளருகின்ற வூர்'. என்று கொண்டு திருவாய்ப்பாடியேறத்திரண்டு வந்து புகுந்து கூட்டத்தின் மிகுதியினால் ஒருவரையொருவர் நெருக்கி நின்று அக்குழலினோசையைக் காதுகளால் நன்கு பருகி அக்கண்ணபிரான் சென்றவிடங்களுக்கெல்லாம் தாங்களும் பின்னே சென்று அவனை ஒரு நொடிப்பொழுதும் விட்டகலமாட்டாதொழிந்தனர். இதிலும் மிக்க அற்புதமுண்டோ? 8. குழலின் துளைகளில் புதைக்கவேண்டுவது புதைத்துத் திறக்கவேண்டுவது திறக்கைக்காக அவற்றைக் கைவிரல்களால் தடவுதலும் கண்கள் ஓர் வகையாக மேல்நோக்கி வக்கரித்தலும், இரண்டு கடைவாயையும் குவித்துக்கொண்டு ஊதுகிறபோது வாயினுள் உள்ள வாயுவின் பூரிப்பாலே வாய் குமிழ்த்தித்தோற்றுதலும் புருவங்கள் மேற்கிளர்ந்து வளைதலுமான இத்தகைய நிலைமையோடு கண்ணபிரான் குழலூத, அதனோசையைக் கேட்டபறவைகள் தாமிருக்குங் கூடுகளை விட்டிட்டோடி வந்து, காட்டில் வெட்டி வீழ்த்த மரம்போல் ஆடாது அசையாது நிலத்தில் விழுந்து கிடந்தன. அங்ஙனமே பல பசுக்கூட்டங்களும் மெய்மறந்து கால்களைப் பரப்பிக்கொண்டும் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டும் சைதந்யமற்ற வஸ்துபோலத் திகைத்து நின்றன. இங்ஙனம் உயர்திணைப் பொருள்களோடு அஃறிணைப் பொருள்களோடு வாசியற எல்லாப் பொருள்களும் ஈடுபட்டு மயங்குமாறு கண்ணபிரான் குழலூதினன். 9. கண்ணபிரானது குழலோசையாகிற வலைவைத்த வழியிலே அகப்பட்ட மான்கள் மெய்மறந்து அறிவழிந்து போகவே, புல் மேயமாட்டாதொழிந்ததுமன்றி, மென்று தின்பதற்காக வாயில் கவ்வியிருந்த புற்களும் உறங்குவான் வாய்ப் பண்டம்போல் தன்னடையே கடைவாய் வழியாக வெளியில் நழுவி வந்து விழுந்தன. அதுவுமன்றி நின்றவிடத்தில் நின்றும் ஒருமயிரிழை யளவும் அசையமாட்டாமலும் திகைத்து நின்றன. 10. கண்ணபிரான் குழலூதிக்கொண்டு நிற்கும் பக்கங்கள் பலவுண்டு; அந்தப் பக்கங்கள் தோறும் அறிவுக்கு யோக்யதையேயில்லாத மரங்கள் செய்த வகையை என்ன சொல்லுவோம்! ஒரு பக்கத்தில் மகரந்த வர்ஷத்தைப் பண்ணும்; மற்றொரு பக்கத்தில் புஷ்பவர்ஷத்தைப் பண்ணும்; வேறொரு பக்கத்தில் கிளைகளைத் தாழ்த்தி நிழலை விளைவிக்கும்; தம்மிலே தாம் உருகியும் நிற்கும். எமக்கருள் செய்ய வேணுமென்று அஞ்சலிபண்ணுவதுபோலக் கொம்புகளைக் கூப்பா நிற்கும். ஆக இப்பதிகமளவும் கண்ணபிரானுடைய திவ்ய குண சேஷ்டித விசேஷங்களை அநுபவித்து நின்றார். ஆக இருநூற்றறுபது பாசுரங்களினால் கண்ணபிரானுடைய திருவவதாரந்தொடங்கி எல்லாக் குண சேஷ்டிதங்களையும் அடைவே அநுபவித்துத் தலைக்கட்டினாராயிற்று.

# கண்ணபிரானும் ஆண்டாளும்

ஆண்டாள் பெரியாழ்வாரைப்போலே க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களை விரிவாக அநுபவித்திலளேனும் இவளுடைய அநுபவம் அஸாதாரணம், மிக வற்புதம். திருப்பாவையிலநுபவம் ஸுப்ரஸித்தமானது. நாச்சியார் திருமொழியிலநுபவத்தைச் சிறிது புஜிப்போம். இத்திவ்வியப் பிரபந்தத்தில் *கோழியழைப்பதன் முன்னம்* என்கிற பதிகம், *மற்றிருந்தீர்கட்கு *கண்ணனென்னுங் கருந்தெய்வம் *பட்டிமேய்ந்தோர் காரேறு* என்னும் பதிகங்கள் ஆகிய இந்நான்கு பதிகங்கள் பேரின்பவெள்ளம் பெருகுவன. இவற்றை ஸாரமாக அநுபவிப்போமிங்கு.

மூன்றும் பதிகத்தின் ப்ரமேயம். (கோழியழைப்பதன் முன்னம்.) கோபீ வஸ்த்ராபஹார சேஷ்டிதங்கூறும் பதிகமிது. கோபிகள் கண்ணபிரானுடைய விரஹதாபம் ஆறுவதற்காகத் தண்ணீரிலே படிந்து குடைந்தாடநினைத்துப் பின் மாலை யெழுந்திருந்து யமுனையிலே ஒரு துறைக்குச் சென்றார்கள். கண்ணனும் அவர்களுடைய செய்தியை க்ஷணந்தோறும் ஆராய்ந்து அறிந்து கொண்டேயிருக்கிறானே; இங்ஙனமே யிவர்கள் ஒரு மடுவிலே குளிக்கப் போனார்களென்றறிந்தவாறே தான் தனியிருக்கமுடியாமல் ரஹஸ்யமாக அவ்வாய்ச்சிகளைப் பின் தொடர்ந்து சென்று அந்தத் துறைக்கே சென்று சேர்ந்து ஒரு மரத்தடியிலே மறைந்திருந்தான். ஆய்ச்சிகளும் வழக்கப்படி தங்கள் ஆடையாபரணங்களைக் கழற்றிக் கரையிலே வைத்திட்டுக் குளிப்பதிலே யூன்றியிருந்தார்கள். அப்போது கண்ணன் அவற்றை அவர்களறியாதபடி கொள்ளை கொண்டு அங்குள்ள வொரு குருந்த மரத்தின் மேலேறி அவற்றை யெல்லாம் தானே யணிந்துகொண்டு ஒரு கிளையிலே வீற்றிருந்தான். கோபிகள் குளித்தான பின்பு ஆடையாபரணங்களை வைத்தவிடத்திற்காணாமல் 'இவை எப்படி போயின! யாராலே கவரப்பட்டன!' என்று திசை தொறும் ஆராய்ந்து நோக்கி முடிவாகக் கிளையின்மீது கண்ணனைக் கண்டார்கள். ஆடையாபரணங்கள் அவனது அவயவங்களிலே விளங்குவதையுங் கண்டார்கள். அவற்றைப் பெற்றுக் கொண்டன்றோ இவர்கள் வெளியேறவேண்டும். அந்தோ என் செய்வார்கள்! நீரைவிட்டு வெளி வரமுடியாமல் நீரிலே நின்றயர்க்கவேண்டியதாயிற்று. நங்கைமார்க்கு நாணமன்றோ பெருஞ்செல்வமாகவுள்ளது. நீரிலேயே எத்தனை நாழிகை நின்று கொண்டிருக்க முடியும்? கயல்களும் வாளைகளும் விடத்தேளெறிந்தாற்போல் காலைக் கதுவுகின்றன; இவ்வாபத்தில் நின்றும் எங்ஙனம் தப்பிப் பிழைப்பதென்று அலமந்து நிற்கிறார்கள். படாத பாடுகளும் பட்டாவது ஆடையாபரணங்களை அவனிடமிருந்து பெற்றுத் தீர வேணுமே. எப்படியாவது அவனையே யிரந்து பெறுவோமென்று துணிந்து அவனை ஏத்துவதும் இறைஞ்சுவதும் பழிப்பதும் பிரார்த்திப்பதுமாக, கண்ணன் "ஆடை வேண்டுவார் கரைமேலேறிவந்து கைகூப்பித் தொழுது பெற்றுக்கொள்வது" என்று கூற, நாணும் நிறையுமிழக்கமாட்டாத ஆய்ச்சிகள் 'தோழியும் நானும் தொழுதோம்' என்று சொல்லி அவ்வாறாகத் தொழுது அவனை மகிழ்வித்து மனோரதமும் நிறைவேறப் பெற்றார்கள். இங்ஙனே கன்னியரோடு கரியபிரான் விளையாடினவாறு அற்புதமாகக் கூறியனுபவிக்கப்பட்டது இத்திருமொழியில்.

பன்னிரண்டாம் பதிகம் — மற்றிருந்தீர்கட்கு. கீழ்ப் பதிகத்தில் இவள்பட்ட ஆர்த்தியை எம்பெருமான் உடனே வந்து பரிஹரித்தருளவில்லை. அந்த ஆர்த்தியோ இவளால் ஆற்றமுடியவில்லை. அவன் திருவுள்ளமானபோது வந்து நம்மைத்

திருவுள்ளம் பற்றுகிருனென்று ஆறியிருக்குந் தன்மையுமில்லை யிவளுக்கு. அவிளம்பிதமாக அவனுடே ஸம்ச்லேஷித்துத் தீரவேண்டும்படி பதற்றமுண்டா யிற்று. தானே காலால் நடந்து அவனுள்ளவிடத்தே போகப் பார்த்தும் அசக்தி யாலே கால் நடை தாராமையாலே தன்னிடத்துப் பரிவுள்ளவர்களை நோக்கி நீங்கள் என்னை யிப்போதே அக்கண்ணபிரானெழுந்தருளியிருக்குமிடத்திலே கொண்டு போய்ப் போடுங்கள் என்று, ஒவ்வொரு பாட்டில் ஒவ்வோரிடமாகக் குறிப்பிடுகிருள். *ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்* என்கிற பிரமாணவசனத்தின்படி ஸ்ரீமந்நாராயணன் திருப் பாற்கடலிற் பள்ளிகோளை விட்டு மதுரைக்கு வந்தானென்று கேள்விப்பட்டு அங்கே தன்னைச் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி வேண்டினள் முதற்பாட்டில். மதுரையில் அவதரித்தும் உடனே திருவாய்பாடிக்கு வஸுதேவரால் கொண்டு போய்ச்சேர்க்கப்பட்டானென்று கேட்டு அங்குத் தன்னைக்கொண்டுபோக விரும்பி ளுள் இரண்டாம் பாட்டில். திருவாய்ப்பாடிதன்னில் *எடுத்த பேராளன் நந்த கோபன் தன் இன்னுயிர்ச் சிறுவனுய் வளராநின்ருனென்று கேட்டு *நந்தகோ பாலன் கடைத் தலைக்கே நள்ளிருட்கணென்னையுய்த்திடுமி னென்ருள் மூன்ரும் பாட்டில். நந்தகோபர் திருமாளிகையிலே விளையாடுவதை விட்டுத் தூயபெரு நீர்யமுனைத் துறைக்குச் சென்ருனென்று கேட்டு *எமுனைக்கரைக் கென்னையுய்த் திடுமினென்ருள் நாலாம் பாட்டில். யமுனை தன்னிலும் காளிய நாகங்கிடந்த பொய்கையிலே சென்று நீர்க்கரை நின்ற கடம்பையேறி அக்காளியனுச்சியில் நட்டம்பாய்கிருனென்று கேட்டு அங்கே தன்னைக் கொண்டுபோகச் சொன்னுள் ஐந்தாம் பாட்டில். (ஸ்ரீ பாகவதம் தசமஸ்கந்தத்தில் இருபத்துமூன்ருமத்யா யத்திற்கூறியபடி) யமுனைக் கரையில் நின்றும் கண்ணனுல் அனுப்பப்பட்டவர் களும் மிக்க பசியுள்ளவர்களுமான கோபால குமாரர்களின் பிரார்த்தனையினுல் மகிழ்ச்சியடைந்த மஹர்ஷிபத்னிகள் பலவகையடிசில்களை யெடுத்துக் கொண்டு கண்ணனும்பலராமனுமிருக்குமிடத்தேறவந்துஆராதித்தார்களென்று ப்ரஸித்தம். அவ்விடத்திற்கு பக்த விலோசன மென்று பெயர்; அங்குத் தன்னைக்கொண்டு போய்ச்சேர்க்கும்படி கோரினுள். ஆரும்பாட்டில். பிரலம்பாஸுரனைக்கொல்வதற் காகப் பலராமன் பாண்டிவடமென்கிற விடம் செல்ல, அவனேடு கூடவே கண்ண பிரானுமங்குச் சென்ருனென்று கேள்விப்பட்டு அங்கே தன்னைக் கொண்டு சேர்க்க விரும்பினுள் ஏழாம் பாட்டில். இந்திரனுக்குப் பூஜையாக இடவேண்டிய சோற்றைக் கண்ணபிரான் கோவர்த்தன மலைக்கு இடச் சொல்லி அதை முற்றும் தானேயமுது செய்ய, இந்திரன் பசிக் கோபத்தினுல் ஏழு நாள் விடாமழை பெய் வித்து ஆநிரையையும் ஆயர்களையும் துன்புறுத்த, குன்றெடுத்தாநிரைகாப்ப தற்குக் கண்ணன் சென்ருனென்று கேட்டு அக்கோவர்த்தனத்தருகே தன்னைக் கொண்டு சேர்க்கும்படி வேண்டினுள் எட்டாம் பாட்டில். கண்ணபிரான் காலய வனனுக்கு அஞ்சினவன்போல மதுராபுரியில் நின்றும் வேருேரிடஞ்சென்று அங்கே த்வாரகாபுரியை யமைத்து எழுந்தருளியிருப்பதாகக் கேட்டு அங்கேறத் தன்னைக் கொண்டு சேர்க்கும்படி வேண்டினுள் ஒன்பதாம் பாட்டில். இப்படியாக அந்தந்த ஸ்தல விசேஷங்களில் தன்னுடைய அபிநிவேசாதிசயத்தை வெளியிட் டாளாயிற்று இப்பதிகத்தினுல்.

பதின்மூன்ரும்பதிகம்—கண்ணனென்னுங் கருந்தெய்வம். கீழ்ப்பதிகத்தில் என்னை யிப்போதே கண்ணபிரானுள்ள ஏதாவதோரிடத்திலே கொண்டுபோய்ச் சேர்த்து விடுங்களென்று வேண்டப்பட்ட உறவினர்கள் 'அந்தோ! கண்ணபிரான் என்றைக்கோ அவதாரக்ருத்யங்களை முடித்துக்கொண்டு தன்னடிச் சோதிக்குச் சென்று சேர்ந்தானே; இப்போது மதுரையிலாவது திருவாய்ப்பாடியிலாவது

யமுனையிலாவது என்ன இருக்கிறது !, அங்கே இவளைக்கொண்டு சேர்ப்பதனு லென்ன பயனுகும்? இவ்வுண்மையை வெளியிட்டாலோ இவளுடைய துயரம் இன்னமும் அதிகரிக்குமே யல்லது இறையும் குறையமாட்டாது; ஆகவே வேறொரு வழியாலே இவளைத் தேற்றவேணு மத்தனை' என்றெண்ணி 'அம்மா கோதாய் ! இப்போது கார்காலமன்றோ; எங்கும் புறப்பட வியலாதுகாண்; சிறிதுதாமதம்; பொறுத்துக்கொள்; பிறகு அவசியம் அழைத்துச் செல்வோம்; அதுகாறும் கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திரு; மேலும் பெண் பிறந்தார்க்கு இத்தனை பதற்றம் தகாது' என்று ஹிதமாகச் சொன்னுர்கள். அது கேட்ட கோதை 'என்னை நீங்கள் அங்குக் கொண்டு செல்லமாட்டிற்றிலீர்களாகில் அவனிடமிருந் தாவது ஏதாவதொரு ப்ரஸாதத்தைக் கொணர்ந்து எனக்குத் தந்து என்னைப் பிழைப்பூட்டுங்கள்; பெண்ணின் வருத்தமறியாத பெருமானுடைய திருவரையில் சாத்தின பீதகவாடையைக் கொண்டு வந்து என் வாட்டந் தணிய வீசுங்கள்; அவனது திருத்துழாயைக் கொணர்ந்து எனது குழலில் சூட்டுங்கள்; அவன் திரு மார்பிலணிந்த வனமாலையைக் கொணர்ந்து எனது மார்பில் புரட்டுங்கள்; அவ் வாராவமுதப் பெருமானுடைய அமுதவாயிலூறிய நீரைக்கொணர்ந்து என் வாயில் கொட்டுங்கள்; அத்திருமால் ஊதிவருகின்ற குழலின் துளையில் கொழித் தெழுந்த அமுதப்புனலைக்கொணர்ந்து என் துமுகத்தேதடவுங்கள்; அப்பெருமான் நடந்து செல்லும் வழியிலுள்ள பொடியைக் கொணர்ந்து என்னுடம்பிலே பூசுங் கள் என்றிப்படி பலவுஞ் சொல்லி ஒருவாறு தன்னுற்ருமையைத் தீர்த்துக் கொள்ள வழி தேடுகிருளிப்பதிகத்தில்.

**பதினுன்காம்பதிகம்—பட்டிமேய்ந்தோர்காரேறு.** பரம காருணிகனுன பெருமான் தன்னை யுகப்பாரைத் தானுகப்பனென்னுஞ்சொல் பொய்யாக்க வல்லவ னல்லனே. அன்பர்களின் அபீஷ்டத்தை அழகாகப் பூர்த்திசெய்ய வல்லவ னன்றோ. தன்னை முற்றூட்டாக அனுபவிப்பதற்கு வேண்டிய ஆர்த்தியை வளர்த்திப் பிறகு பரிபூர்ணுனுபவத்தை யளிப்பவனுயிற்றே. அப்படியே மிக மிக வளர்ந்த ஆர்த்தியையுடைய கோதைக்கு மிகுந்த அன்போடு தன்னைக் காட்டிக்கொடுக்கையாகிற திவ்யானுபவத்தை யருள்செய்தனன். ஸ்ரீவைகுண் டத்திலிருக்கிற விருப்பை ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்குக் காட்டிக்கொடுத்ததுபோல விருந்தாவனத்திலே வாழ்ந்தபடியை ஆண்டாளுக்குக் காட்டிக் கொடுத்தருளி னன். அந்த அற்புதமான அநுக்ரஹத்தை விலக்ஷண ஸம்வாத முகத்தாலே வெளியிடுவதாயிற்று இப்பதிகம். தானெருத்தியேயான கோதை இரண்டு தோழிகளின் தன்மையை ஏற்றுக்கொண்டு ஒருத்தி வாக்காலே கேள்வி கேட் பதும் மற்றொருத்தி வாக்காலே விடையிறுப்பதுமாக அமைத்து நந்தன் மைந் தனைத்தான் நன்ருகக் கண்டநுபவித்தபடியைப் பேசி இத்திவ்ய பிரபந்தத்தைத் தலைக்கட்டினுளாயிற்று. இப்பதிகத்தில் இறுதிப்பாசுரமொன்றொழிய மற்றைப் பாசுரங்களொன்பதிலும் முன்னடிகள் வினுவாகவும் பின்னடிகள் விடையாகவு மமைந்துள்ளன. பலராமனுக்குத் தம்பியாய் யதேஷ்டமாகத் திரியுமவனுய் என்னைப் பிரியவிட்டு வாட்டுமவனுய் ஏலாப்பொய்களுரைப்பவனுய் என்னைத் தன் கண்வலைப்படுத்தித் துடிக்கவிடுபவனுய் தருமமறியாத குறும்பனுய் வலக்கையாழி யிடக்கைச் சங்கமுடையவனுன பெருமானைக் கண்டதுண்டோ? என்று வினவுவதும், இட்டமான பசுக்களை யினிது மறித்து நீரூட்டி விளையாட வும் பெரிய திருவடியின் சிறகின்கீழே வீதியாரவரவும் களிறும்புள்ளும்மடிய வேட்டையாடிவரவும் விருந்தாவனத்தே கண்டேனென்று விடையிறுப்பதுமாக இட்டுத் தன்னனுபவானந்தமிகுதியைக் கூறி முடித்தாளாயிற்று.

# கண்ணபிரானும் நம்மாழ்வாரும்

பட்டர் நம்மாழ்வார்க்கு *க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வ மென்று திருநாமம் சாற்றினர். கண்ணபிரான் காதலே வடிவெடுத்தவரென்றபடி. இவ்வாழ்வார் *தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே* என்றும் *கற்பார் இராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ* என்றும் ஸ்ரீராமபக்தி தலையெடுத்துப் பாசுரங்களருளிச்செய்திருந்தாலும், முதற்பிரபந்தத்தின் முடிவில் *நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னு மீனச்சொல்லே* என்று பேசி, சரமப் பிரபந்தத்தின் தொடக்கத்தில் *மத்துறு கடைவெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு எத்திற முரலினோடிணைந்திருந் தேங்கிய வெளிவே* என்று ஆறுமாதம் மோஹித்துக் கிடந்தாராதலின் க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமேயாவரிவர். பட்டர் ராமாவதாரத்தில் மிகவும் பக்ஷபாதியென்று ப்ரஸித்தர்; அவர் தாமே நம்மாழ்வாரை *க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமென்றாரெனில், இஃது உண்மையை யொளிக்கமாட்டாமல் ஸத்யமாய்ச் சொன்ன தென்று கொள்ளத் தக்கதன்றோ. இவ்வாழ்வார் பெண்ணிலைமை யெய்திப் பேசிய பாசுரங்களில் [தலைவி பாசுரமானாலும் ஸரி, தாய் பாசுரமானாலும் ஸரி, தோழிபாசுரமானாலும் ஸரி, அவற்றிலெல்லாம்] ஸ்ரீக்ருஷ்ணகுணாநுபவமே தலைசிறந்து விளங்கும். திருவாய் மொழியில் மூன்று பதிகங்கள் கண்ணபிரானிடத்தில் ஆழ்வார்க்குள்ள அபரிமிதமான காதலை விளக்கும். அவையாவன;—(1) மின்னிடை மடவார்கள். (2) மல்லிகை கமழ்தென்றல். (3) வேம்மருதோளிணை. இம்மூன்று பதிகங்களையும் ஸாரமாக அநுபவிப்போமிங்கு. *மின்னிடை மடவார் பதிகம் ஆறும் பத்தில் இரண்டாவதாகும். இதன் பிரமேயம் வருமாறு;—முந்தினபதிகத்தில் *வைகல் திருவண்வண்டூர் வைகுமிராமனுக்குச் சிலபுள்ளினங்களைத் தூது விட்டார். "தேறுநீர்ப்பம்பை வடபாலைத் திருவண்வண்டூரில் மாறில்போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையுமுள ளென்மின்களே" என்று சொல்லிச் சக்ரவர்த்தி திருமகன்பால் தூதுவிட்டார்; அவன் உடனே வராமல் சிறிது தாமதித்து வந்தபடியாலும், இராமபிரானை திருக்கோலத்தோடுவராமல் கண்ணபிரானை திருக்கோலத்தைக் காட்டிக்கொண்டு வந்து நின்றபடியாலும் அவனோடு சிறிது லீலாரஸம் கொண்டாட வேணுமென்று ஆழ்வார்க்குத் தோன்றியது. கண்ணபிரான்றான் குறும்பு செய்வானொருவனாகையாலே அவனோடு குறும்பாக விளையாடினால்தானே இன்சுவைமிகும். அதனால் ஆழ்வார் தாமானதன்மையை விட்டு ஆயர் பெண்டிர் தன்மையை யெய்தி ஊடல் திறத்தில் பணித்த பதிகம்; கண்ணபிரான் கண்முன்னே வந்து நிற்க "இங்கே ஏதுக்கு வந்தாய்? உனது அந்தரங்கவிருப்பத்திற்கு இலக்கான மின்னிடை மடவார்கள் பக்கலிலே யெழுந்தருளலாம்; இங்கே என்னகாரியமுள்ளது? கடுகச் செல்வாயாக" என்று கோபிகள் சொல்லும் சொல்லாகப் பேசினவளவிலே, இது கேட்ட கண்ணபிரான் 'உங்களுக்கு என்மேல் இத்தனை வெறுப்பாகில் நீங்கள் சுகமாக இருங்கள், நான் போய்வருகிறேன்; என்னுடைய வஸ்துக்களை நான் எடுத்துக் கொண்டு போகிறேன்' என்று சொல்லிக்கொண்டே கீழேகிடந்த பந்துகழல் குழமணன் முதலிய லீலோபகரணங்களை யெடுக்கப்புக்கான்; உடனே ஆய்ச்சிகள் அவற்றைத் தங்கள் கையிலே யெடுத்துக்கொண்டார்கள்; அவனை எளிதில் போகவொட்டுவார்களோ இவர்கள்தாம்; மேன்மேலும் பிணக்குக்கு இடம் தரவேணு மென்றே இவர்களும் நினைத்திருக்கையாலே இந்த அல்பவஸ்துக்களைக்கொண்டு போனால்போகட்டு மென்றிராமே 'எங்கள் வஸ்துக்களை நீ எப்படி யெடுத்துக்கொண்டு போவாய்?' என்று சிலுகிட்டு அவற்றைத் தாங்களே வாரியெடுத்துக் கொண்

டார்கள். 'இது நமக்குப் பெரு நன்மையேயாயிற்று' என்று கொண்ட கண்ணபிரான் கைதீண்டிச் சண்டையிட அனுகூலமாகச் செய்தார்களேயென்று உகந்து அவர்கள் கைமேலே கையையிட்டு அவற்றைப் பறிக்கப் புகுந்தான். அப்போது ஆய்ச்சிகள் "கன்மமன்று எங்கள் கையில் பாவை பறிப்பது" என்றார்கள். 'எங்கள் கையிலுள்ள பாவையைப் பறிப்பது நீ செய்யத்தகுந்த காரியமன்று' என்னும் பொருளை விவக்ஷித்து இவர்கள் சொன்னார்கள்; 'இது உன்னால் செய்ய முடியாது' என்று இவர்கள் சொல்லுவதாக அவன் கொண்டு 'என்னால் செய்ய முடியாதது மொன்றுண்டோ? என்னை யாரென்று நினைத்திகோள்? கடல் ஞாலமுண்டிட்ட எனக்கு அஸாத்யமானது மொன்றுண்டோ?' என்று சொல்லி வலியப் பறிக்கத் தொடங்கினான்; அப்போது ஆய்ச்சிகள் 'பிரானே! உனக்கு அஸாத்யமானதொன்று இருப்பதாக நாங்கள் நெஞ்சிலும் நினைத்திலோமே; அப்படி நாங்கள் சொல்லவுமில்லையே. கடல்ஞாலம் மட்டுமன்று; உபயவிபூதியையும் உட்கொள்ள வல்லாய் நீ என்பதை நாங்கள் அறிவோமே; இதில் எமக்கு ஸந்தேஹமில்லை காண்; இப்படிப்பட்ட தீமைகளைச் செய்வது உனக்குத் தகுதியன்று என்றோமத்தனை' என்றார்கள். 'நின்மலனான எனக்குமா இது பிழையாகும்' என்றான். 'உனக்கேலும் பிழை பிழையே' என்றார்கள். இவர்கள் இங்ஙனே சொன்னவாறே மேலே ஒன்றும் சொல்லகில்லாமல் காதோடே சில சொல்லுவதாக வந்து மருமமான சில பேச்சுக்களை மெல்லப் பேசினான். அதற்கு ஆய்ச்சிகள் அதிக்ஷேபம் செய்ய, 'நான் தப்பாக என்ன சொல்லிவிட்டேன்' என்று தான் அவர்களுக்குக் காதிலே சொன்ன குறும்பு வார்த்தையை உரக்கச் சொல்லவேணுமென்று வாயெடுத்தான்; உடனே இவர்கள் அவனது வாயைப் புதைத்து "அது கேட்கில் என்னைம்மார் தன்மபாவமென்னார்" என்றார்கள்—கண்ணா! அஸப்யமான பேச்சுக்களைக் காதோடே சொன்னது போதும்; அவற்றை நீ உரக்கவுஞ் சொல்லி, அவை எங்கள் ஸஹோதரர்கள் காதிலும் விழுமாகில் அவர்கள் பாவமென்றும் புண்ணியமென்றும் பாரார் என்றார்கள். பாப புண்யங்களுக்கு அஞ்சாமல் அவர்கள் என்ன செய்துவிடுவார்களென்றான் கண்ணன்; அதற்கு மறுமொழி கூறினார்கள் [ஒருநான்று தடிபிணக்கே.] அது நாங்களறிவோமோ? ஆளுக்கொரு தடியெடுத்துக்கொண்டு வந்து தகர்ப்பர்கள் கிடாய்; குத்தும் பூசலுமாயன்றோ தலைக்கட்டும் என்றார்கள்.

அதுகேட்ட கண்ணபிரான் 'ஆய்ச்சிகாள்! என்னைத் தடிகொண்டா அடிக்கப்போகிறீர்கள்? பரமஸந்தோஷம். அப்படிப்பட்ட ஆண் புலிகளைத்தான் நானும் தேடிக்கொண்டு கிடக்கிறேன்; தடிபிணக்குக்காரர்கள் எத்தனைபேர் வருகிறார்களோ வரட்டும்; எனக்கோ தடியும் வேண்டாம் தாம்பும் வேண்டாம்; மல்லரை மாட்டிய தேவாதி தேவன் நான் என்பதை இன்று காட்டிவிடுகிறேனா இல்லையா பாருங்கள். அப்படியா ஸமாசாரம். என்னை யாரென்று நினைத்தீர்கள்? இடையர்கையிலும் இடைச்சிகள்கையிலும் உதைபட்டுப்போகிறவன் நானென்று நினைத்தீர்கள் போலும். அதையுந்தான் ஒரு கை பார்த்துவிடுவோமே. என் சரக்கறியாதார்க்கு என் சரக்கை இன்று காட்டியே தீருகிறேன் பாருங்கள் என்று பெரிய ஆவேசங் கொண்டவன்போலப் படபடத்துப் பேசி நின்றான். பிறகு ஆய்ச்சிகள் 'பிரானே! உன் சரக்கை நாங்கள் அறியாதவர்களல்லோங் காண்; உன்னுடைய ஜாதகம் முழுவதும் எமக்கு நன்கு தெரியுங்கிடாய்; உன் சரக்கை நாங்கள் அறியாதவர்களாகிலன்றோ இத்தனை ஆரவாரம் நீ செய்யவேண்டும்; நீ அறிவிப்பதற்கு முன்னமே எல்லாம் நாங்களே அறிவோங் காண்' என்றார்கள். 'நீங்களறிந்தவாற்றைச் சொல்லிக் காட்டுங்கள் பார்ப்போம்' என்றான் கண்ணன். 'உன்னுடைய மூலகந்தமே பிடித்து நாங்கள் அறிவோங் காண்' என்று பீடிகை

யிட்டுக்கொண்டு பேசத் தொடங்கினர்கள் ;..........இப்படியாகவொரு ஆச்சரிய மான லீலாரஸம் காட்டப்பட்டது* மின்னிடைமடவார் பதிகத்தில். இப்படி 'போகுநம்பீ' என்றும் 'கழகமேறேல் நம்பீ' என்றும் 'ஒருநான்று தடிபிணக்கே' என்றும் பேசிவிட்டு, பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் "குருகூர்ச் சடகோபன் ஏத்திய தமிழ் மாலை" என்று தலைக்கட்டினது மிகவற்புதம். இவ்வூடல் திறத்தை யெல்லாம் எம்பெருமான் தன் திருவுள்ளத்தாலே தோத்திரமாகவே கொண்ட படியைக் கூறியவாறு.

இனி (2) *மல்லிகை கமழ் தென்றல் திருவாய்மொழியைச் சிறிது அநுபவிப்போம். இப்பதிகத்தற்கு *அணியிழையாய்ச்சியர் மாலைப் பூசலென்று ஆழ்வார்தாமே பெயரிட்டுவைத்தார். *காடுகளூடுபோய்க் கன்றுகள் மேய்த்து மறியோடிக் கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற தாமோதரன் மாலைப்பொழுதிலே திருவாய்ப்பாடியேறத் திரும்பி வருகையில் பசுக்களையெல்லாம் பின்னே வரவிட்டுத் தான் முன்னே குழலூதிக்கொண்டு வருவது சில நாட்களில். பசுக்கூட்டங்களையெல்லாம் முன்னே போகவிட்டுத் தான் பின்னே வருவது சில நாட்களில். அப்படி வருகின்ற நாளில் அப்பெருமானைப் பசுக்களின் முற்கொழுந்திலே காணாமல் திருவாய்ப்பாடியிற் பெண்கள் பட்டபாட்டை ஆழ்வார்தாம் ஏறிட்டுக்கொண்டு பேசுவதாயிற்று இப்பதிகம். மல்லிகையின் நறுமணத்தோடு கூடிய தென்றல் வாளாலறுக்குமா போலே ஈர்கின்றதையோ!, இனிய பண்ணிசையானது செவியைத் துளைக்கின்றதந்தோ!; மாலைப்பொழுதோ மயக்குகின்றது. செந்நிறங்கொண்டு கிளர்ந்தெழுந்த மேகங்கள் சரீரத்தைச் செதுக்குகின்றன. கோவலர் கோவிந்தன் முன்பு அணைந்த முலைகளையும் தோள்களையுங் கொண்டு எங்ஙனே தரித்துப் பிழைப்பது!. சேக்களின் கழுத்தில் ஒலிக்கின்ற மணியும் தென்றற் காற்றும் வேய்ங்குழலும் நலிகின்றவிதம் இன்னதென்று சொல்லத் தெரியவில்லையே! பகற்போதை முடித்துவந்து தோற்றுகின்ற மாலைப்போதும் அழகிய சந்தனமும் பஞ்சமராகமும் முல்லை மாலையும் குளிர்ந்த வாடைக்காற்றும் ஐயோ! என்னப்பண்ணுகின்றனவே. கானகத்தில் அசுரர்களோடு பொருது வெற்றி பெறப்போயின பெருமான் எனது துன்பங்களைத் தொலைக்க வந்து சேர்கின்றிலனே! இனிஸத்தை பெற்றிருந்து என்னுயிரைக் காக்கும் விதமென்னே!........ என்றிங்ஙனே வகைவகையாகச் சொல்லிப் புலம்பின பாசுரங்களின் இனிமையை என் சொல்லுவோம்! பொருளில் நெஞ்சு செல்லவேண்டா; சொல் தொடை தானே அமையுமே நெஞ்சு உருக.

இனி (3) *வேய்மருதோளிணைப் பதிகத்தைச் சிறிது அநுபவிப்போம். கண்ணபிரானும் கோபிகளும் ஒரு படுக்கையிலே கலந்திருக்கின்றார்கள். உத்தர ராமசரித நாடகத்தில் மஹாகவி பவபூதி "அவிதித கதயாமா ராத்ரிரேவ வ்யரம்ஸீத்" என்று இராமபிரான் சொல்லிற்றாக வைத்துப் பேசினபடியே இரவு கழிந்து விடியற்காலம் வந்தது. அக்காலத்திற்கேற்ற குயில் மயில் முதலானவற்றின் பாடலாடல் முதலிய அடையாளங்களுமாயின. கண்ணபிரான் கூடவேயிருக்கச் செய்தேயும் காலைப்போதாகையாலே பசு மேய்க்கப் புறப்பட்டுக்காட்டுக்குப் போய்விட்டானேயென்று அஸ்தாநே அதிசங்கைபண்ணி நோவுபடுகிற இடைப்பெண்களது பேச்சாக அமைக்கப்பட்டது இப்பதிகம். கண்ணா! பசுக்களைமேய்க்க நீ போகிற ஒருபகலானது ஆயிரம் யுகமாகக் கழியாநின்றந்தோ! தாமரைக்கண்ணா! நீ தகவுடையையல்லை காண்! அடிச்சிகளான எங்கள் தனிமையையும் உன்னைப் பிரிந்துபடும் அலமாப்பையும் நினைக்கின்றாயில்லையே. உன் தொழுவிலுள்ள பசுக்களையே ஆதரித்து எம்மை அநாதரித்திட்டு அவற்றை

மேய்க்கப் போய்விட்டனையே; அன்றியும், நீ கூடியிருக்கும் காலத்திலே 'பிரியேன், பிரியில் தரியேன்' என்றாப்போலே நீ பேசின விநய மதுர பாஷணங்கள் நெஞ்சைவிட்டகலாதே அடிக்கடி நினைவுக்கு வந்து நலிகின்றனவே!. கண்ணா! நீ பசு மேய்க்கப் போகிற கானகம் மிகக் கொடிதாயிற்றே! எழும்பூண்டெல்லாம் அசுரப்பூண்டென்னும்படியான விடங்களிலன்றோ நீ செல்லுகின்றாய்; எப்போது யாராலே என்ன அபாயம் விளையுமோவென்று எங்கள் நெஞ்சு துடிக்கும்படியை யறிகின்றிலையே; உனக்குப் பரிவனான பலதேவனையும் தவிர்த்துத் தனியே அலைகின்றாயே!......என்று ஆய்ச்சியர் புலம்பிக் கதறுகிறபடியாய் அமைந்தது இப் பதிகம்.

இப்பதிகத்தில் இடையில் ஒரு சிறந்த சாஸ்திரார்த்தம் வெளியிடப்படுகின்ற அழகு காணவேணும். "அசுரர்கள் தலைப்பெய்யில் யவன்கொலாங் கென்று ஆழுமென்னாருயிர் ஆன்பின் போகேல்' (8-பா.) என்றார்கள். நீ பசு மேய்க்கப்போகிற காட்டிலே அசுரர்கள் வந்து கூடிப் பொருதால் என்ன அபாயமாகுமோவென்று தளும்புகின்றோம்; ஆதலால் நீ பசுக்களின்பின்னேபோகாதே; ஆயர் சிறுமிகளான உன் காதலிமார்களுடனே கூடிக்களித்து இவ்விடமேயிரு என்றார்கள். "இளவாய்ச்சியர் நீயுகக்கு நல்லவரொடு முழிதராயே" என்றார்கள். அது கேட்ட கண்ணபிரான் 'இப்படி நீங்கள் சொல்லுகிறவிது உண்மையான வார்த்தையாகுமோ? ஏதோ நான் போகாமைக்காகச் சொல்லுகிற வார்த்தையேயொழிய, உங்களருகே நான் வேறு சிலமாதரோடே கலந்து பரிமாறினால் அதை நீங்கள் பொறுத்திருப்பீர்களோ? கண்ணாலேயே தஹித்துவிடமாட்டீர்களோ?' என்று சொல்ல, அதற்கு மறுமாற்ற முரைக்கின்றார்கள் ஆய்ச்சிகள்—**[உகக்கு நல்லவரொடு முழிதந்து உன்றன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும், நாங்கள் வியக்க இன்புறுதும் எம் பெண்மையாற்றோம் எம்பெருமான் பசு மேய்க்கப் போகேல்]** கண்ணா! எங்களைக் காட்டிலும் நீ மிக விரும்பும்படியான பாக்யவதிகளோடு நீ ரமித்து அதனால் உன் திருவுள்ளத்தில் ஒரு மகிழ்ச்சி விளைந்தால் அதுவே எங்களுக்குப் பேறாக நாங்கள் மிக மிக இன்பமெய்துவோம். எவ்வகையினும் உன்திருவுள்ளம் இடர்கெட்டு உகப்படையவேண்டுவது எங்களுக்குப் புருஷார்த்தமே மொழிய எங்களுக்கென்று தனிப்பட ஒரு ஆசை யுண்டோ? காதலன் வேறு பெண்களோடு ரமித்தால் பொறுத்திருக்குந்தன்மை மாதர்கட்கு இல்லையாயினும் நாங்கள் ஸ்வரூப வுண்மையை நன்குணர்ந்தவர்களாதலால் நீயுகந்தாரை உகக்குமவர்களேயாவோம்—என்றார்கள். இதுதான் சிறந்த சாஸ்த்ரார்த்தம்.

ஆசார்யஹ்ருதயம் மூன்றாம் பிரகரணத்தில் "மூன்றில் சுருக்கியவைந்தையும்" என்று தொடங்கியுள்ள சூர்ணையில் "எம்மாவொழிவில் நெடுவேய் என்கிற" என்றுள்ள ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்திக்கத்தக்கது. (1) *எம்மா வீட்டுத் திறமும் செப்பம். (2) *ஒழிவில் காலமெல்லாம். (3) *நெடுமாற்கடிமை. (4) *வேய்மருதோளிணை. ஆகிய நான்கு பதிகங்களும் புருஷார்த்தஸ்வரூபத்தை விசதமாக்குவனவாக அறுதியிடப்பட்டிருக்கின்றது. முந்தின மூன்று பதிகங்களில் புருஷார்த்தஸ்வரூபம் நிஷ்கர்ஷிக்கப்பட்டிருப்பது ஸுஸ்பஷ்டம்; *வேய் மருதோளிணை யென்னுமிப்பதிகத்தில் அது எங்கே தெரிகின்றதென்று ஆராய்ந்தால் இங்கேதான் தெரிந்துகொள்ளத்தக்கதாகும்; "உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும் எம்பெண்மையாற்றோம்" என்னுமிதுவே இப்பதிகத்திற்கு உயிர் நிலையாயிருக்கும். .... .... *

# கண்ணனும் குலசேகராழ்வாரும்

குலசேகராழ்வார்க்கு சக்ரவர்த்திதிருமகன் பக்கலிலே அளவு கடந்த பக்தியென்று ப்ரஸித்தம். பெருமாள் திருமொழியில் இராமபிரானைப்பற்றி மூன்று பதிகங்கள் பாடினர்; கண்ணபிரானைப்பற்றி இரண்டு பதிகங்களே பாடினர். ஆயினும் இவரும் க்ருஷ்ணபக்தியில் குறைந்தவரல்லர். இவர் தமது திவ்யப்பிரபந்தத்தில் *மாவினை வாய்பிளந்துகந்த மாலை வேலைவண்ணனை யென் கண்ணனை வன்குன்ற மேந்தி ஆவினையன்றுய்யக் கொண்ட ஆய ரேற்றை* என்று ஸ்ரீக்ருஷ்ணாவதார சேஷ்டித விசேஷங்களையே முந்துற முன்னம் பாடத்தொடங்கினர். இவ்வாழ்வாரது திவ்யஸூக்திகளில் ஒரேபாசுர மிங்கெடுத்தநுபவிப்போம்;

> "முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும் முகிழிளஞ்சிறுத்தாமரைக் கையும்
> எழில்கொள்தாம்புகொண்டடிப்பதற் கெள்குநிலையும் வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்
> அழுகையுமஞ்சி நோக்குமந்நோக்கும் அணி கொஞ்செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்
> தொழுகையுமிவைகண்டவசோதை தொல்லை யின்பத்திறுதிகண்டாளே."

(பெருமாள் திருமொழி 7—8.)

கண்ணன் *தாரார் தடந்தோள்களுள்ளளவும் கைநீட்டி ஆராத வெண்ணெய் விழுங்கு மவனாகையாலே வெண்ணெயிலுண்டான விருப்பத்தின் மிகுதியினால் கை முழுதும் வெண்ணெய்க் குடத்திலே புகவிட்டு அளைவன்; ஒரே கபளமாக வாரி விழுங்கவல்லவனாயிருக்கச் செய்தேயும் தொட்டுத் தொட்டு உண்பன்; அப்படியுண்ணும்போது யசோதை கண்டு 'இப்படி ஓயாமல் க்வ்யங்களை யுண்டால் ஜரிக்குமோ?' என்கிற அதிசங்கையினால் அடிக்கத் தடியும் தாம்புமெடுப்பள்; *தாயெடுத்த சிறு கோலுக்குளைந்தோடித் தயிருண்ட வாய் துடைத்த மைந்தன்* என்றபடி அந்தத் தயிரை மறைக்கவெண்ணித் துடைத்துக்கொள்ள ஆரம்பித்து வாய் நிறையச் சுற்றிலும் பூசிக்கொள்வன்; பிறகு யசோதையால் அடிபட்டு அழுவன்; அஞ்சினாற்போல் நோக்குவன்; வாய் துடிக்கும்படி விக்கிவிக்கி யழுவன்; தன்னிடத்தில் குற்றம் செய்தவர்கள் தொழுது பிழைக்கக் கண்டவனாகையாலே தானும் தொழுது பிழைக்கவெண்ணி ஓர் அஞ்ஜலி பண்ணுவன்; தாயே! இனி நான் நெய்பால் தயிர் வெண்ணெயின் அருகும் செல்வதில்லை யென்று சொல்லி தயநீயதசை தோற்றத் தொழுவன்; ஆக இக்கோலங்களை யெல்லாங்கண்டு பேரின்ப வெள்ளத்தின் எல்லையிலே நிற்பளாம் யசோதை.

இதில் *தொழுகையுமிவைகண்டவசோதை* என்றதை ஊன்றி நோக்கும் போது மனம் ஜடமாகின்றது. உலகத்தையெல்லாம் தொழுவித்துக்கொள்ளும் தெய்வம்தான் தொழுகின்றதென்றால் இதைப்பற்றி என்ன நினைப்பது! என்ன சொல்லுவது!. 'குழந்தைகள் அழுது ஜயிக்கும்; பக்தர்கள் தொழுது ஜயிப்பர்' என்று வசனம். குழந்தைகள் வேண்டியவற்றை வாயினால் கேட்டுப்பெற முடியாதாகையாலே அழுதே பெற்றுவிடுவது இயல்பு. பக்தர்கள் தங்கள் குற்றங்களைத் தொழுது பொறுப்பித்துக் கொள்வது எங்குங்கண்டது. கண்ணன் குழந்தைகள் செய்வதும் செய்தான், பக்தர்கள் செய்வதும் செய்தான். குழந்தைகள் செய்வதைச் செய்தானென்பதில் வியப்பில்லை. பக்தர்கள் செய்வதை [அதாவது தொழுகையை]ச் செய்தானென்றால் இஃது என்ன லீலாரஸம்! ஒருபுறம் *தோழியும் நானும் தொழுதோம்* என்று கோபிகளைத் தொழப்பண்ணுகிறான். மற்றொருபுறம் கோபியைத் தான் தொழுகிறான். இந்த நிலைமையில் தேவரும் முனிவரும் வந்து தொழுகின்றார்கள்.